Regd. No. 2975

ஸ்ரீ



# ஸ்ரீ ராமாநுஜன்

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1974ஆம் பிப்ரவரிமீ வெளியிடப்பட்டது

ஸ்ரீவாதிபீகரமஹாகுருவம்ச தீப:

ஸ்ரீவத்ஸவம்சகலசோதிதபூர்ணசந்த்ர:



ஸர்வஜ்ஞ இதிப்ரதித: ஸகலைச்ச ஸத்பி:

ஜீயாஜ்ஜகத்குரு ரநந்தகுருத்தமோஸௌ.

என்பால் அன்புள்ள பெரியார்களுக்கும் சிறியார்களுக்கும் ஆனந்தமாகத் தெரிவித்துக்கொள்வது. பூருவாசாரியர்களின் காலத்திற்குப் பிறகு சில நூற்றுண்டுகட்குப் பிறகு அவ்வாழ்வாராசார்யர்களோடொக்கப் பரிகணனீயராக எழுந்தருளியிருந்து புகழுடம்புடன் விளங்குபவராய் நாற்றிசையும் பரந்த நற்புகழுடையரான ஸ்ரீமதுபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்ய ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் ஜகத்குரு காதி அநந்தாசார்ய ஸ்வாமி திருநாடலங்கரித்து முப்பதெட்டு வருஷமானாலும் எந்நாட்டினரும் அவரை மறக்க இயலாது. அந்த மஹாஸ்வாமியை ஸாக்ஷாத்தாக ஸேவித்த பாக்யசாலிகள் இற்றைக்கும் எண்டிசையும் பரந்துள்ளார்கள். அந்த மஹாஸ்வாமிக்கு நாளது 13—2—74 முதலாக 22—2—74 வரையில் ஸ்ரீ காஞ்சீபுரியில் அவரது திருமாளிகையில் அவருடைய திருக்குமாரராலும் மற்றும் ஸிஷ்யவர்க்கங்களாலும் நடத்தப்பட விருக்கிற சதாப்தீ மஹோத்ஸவம் (அதாவது நூற்றாண்டு நிறைவு விழா) ஸகல பக்தர்களாலும் ஸேவிக்கத்தக்கது. இதைப்பற்றின விவரணங்கள் பெரும்பாலும் தேசவிருத்தாந்த பத்ரிகைகளில் பிரசுரமாகி வருகிறது. துண்டுப் பத்ரிகைகளாலும் உலகுக்குத் தெரியவரும். இத்தகைய காட்சி ஒரு புருஷாயுஸ்ஸில் இதுதான் முதன்மையானதென்று திண்ணமாக எண்ணலாம். பாம்பே மஹாநகரத்தில் மாடுங்காவில் திருவேங்கடமுடையான் தேவஸ்தானத்தை தென்னாட்டுத் திருப்பதிகள் போன்ற முறையில் அமைத்திருப்பதும் அவ்வாறே மற்றும் சில இடங்களிலும் அமைத்திருப்பதும் அவருடைய பெரும் புகழுக்குச் சான்றாகும்.

மீண்டும் தெரிவித்துக்கொள்கிறேன். நமது தென்னாட்டில் வாழும் ஸ்ரீ வைஷ்ணவ மணிகள் இவ்வரிய பெரிய ஸந்தர்ப்பத்தை இழக்காமல் ஸௌகர்யானுகுணமாக இதில் பங்குகொண்டு க்ருதார்த்தர்களாகவேண்டுமென்பது எனது அன்புமிக்க வேண்டுகோள்.

P. B. அண்ணங்கராசாரியர், பத்ராதிபர்.

# ஸ்ரீ ராமாநுஜன் 306



ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 26 | ப்ரமாதீசஹு 1974 பிப்ரவரி மாத வெளியீடு | ஸஞ்சிகை 6


## மார்கழித் திங்களின் மகிழ்ச்சி மாண்பு

நேற்றைய மார்கழிமாதம் முப்பதும் தப்பாமே சென்னையில் நாமநுபவித்த ஆனந்தவெள்ளம் ''முகில்வண்ண வானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே'' என்ற பாசுரப்படியன்றிக்கே ''இங்கே காண விப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங்காலையே'' என்கிற பாசுரத்தின்படியே யாயிற்றென்பதை எத்தனை தடவை எழுதினாலும் புநருக்திதோஷ துஷ்டமாகாது. சென்னையில் எத்தனை பேட்டைகளில் எத்தனை ரஸிகர்களுண்டோ அத்தனை ரஸிகர்களும் குழாங்கூடி அநுபவித்த அதிசயத்தை நாமே எழுதிக்கொள்வது தகாதெனினும் திருவாய்மொழியில் *குரவையாய்ச்சியரோடு பதிகத்தில் ''அரவில்பள்ளிப்பிரான்தன் மாய வினைகளையே அலற்றி இரவு நன்பகலும் தவிர்கிலம் என்ன குறை நமக்கே—எனக்கெவ்வுலகம் நிகரே—எனக்கென்னினி நோவதுவே—எனக்கென்னினி வேண்டுவதே—எனக்கென்ன இகலுளதே—எனக்கென்ன மனப்பரிப்பே—எனக்கினி யார் நிகர் நீணிலத்தே—எனக்கினியென்ன கலக்கமுண்டே—மலக்குநாவுடையேற்கு மாறுளதோ இம் மண்ணின் மிசையே, எனக்கார் பிறர் நாயகரே'' என்று ஆழ்வார் களித்துப் பேசியருளின கணக்கிலே நாமும் பேசுகிறோம். ''மறிகடல்போன்றவற்றால் கலக்குண்ட நான்று கண்டார் எம்மை யாரும் கழறலரே'' என்ற திருவிருத்தப் பாசுரப்படியே நேரில் காணப்பெற்றார் யாரும் அழுக்காறுகொள்ளார். சென்னை உயர் நீதிபதி ஜஸ்டிஸ். ஸோமசுந்தரம் அவர்கள், ஜஸ்டிஸ் K.S. வெங்கடராமன் I.C.S. அவர்கள், கவர்னர் கனம் K.K.ஷா அவர்கள் போன்ற மஹநீயர்கள் ப்ரவசன

கோஷ்டியில் கூடியிருந்து குளிர்ந்த மகிழ்ச்சி நினைதொறும் சொல்லுந் தொறும் நெஞ்சுகனிந்து நெகிழ நின்றது.

விசேஷித்து, சென்னையில் நெடுநாள் ஹைகோர்ட் ஜட்ஜ் பதவி வகித்திருந்து இரண்டு வருஷ காலமாக டில்லி மாநகரில் சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் பதவியில் உலகம் நிறைந்த புகழாளராய் வாழ்கின்ற உயர்திரு அழகிரிசாமி அவர்கள் எதிர்பாராத படி சென்னைக்கு விஜயம் செய்து நமது ஜாகைக்கு வந்து பல நல்விஷயங்களைப் பேசி மகிழ்வித்தது தனிப்பட்டதோர் ஆனந்தம். நமது ப்ரவசன கோஷ்டியில் ஆயிரவர் கூடியிருந்தாலும் நம் கண் முகப்பே வீற்றிருந்த ரஸிகமணிகள் நூற்றுவரின் ஸஹ யோக ஸந்தோஷத்தைப் பற்றித் தனிப்பட மிகமிக எழுத வேண்டும். ஒரு மஹாகவி கூறினன்—''அரஸிகேஷு கவித்வநிவேதநம் சிரஸி மா லிக மா லிக மா லிக'' என்று. இது தெய்வத்தை நோக்கிச் சொல்லும் ச்லோகம். இதன் பொருளாவது—''என் தலையில் எத்தனை வகையான தாரித்ர்யத்தை எழுதினாலும் எழுது. தெய்வமே! நான் கற்ற கல்வியை அரஸிகர்கள் பாடே காட்டுகையாகிற தௌர்பாக்யமொன்றை மட்டும் எழுதாதே'' என்பதாம். இத்தகைய தௌர்பாக்யத்தைப் பெறுமை தனிப்பட்ட தவப்பயனேயாம் நமக்கு. ஆங்காங்கு மற்றுமுள்ள ப்ரவசன கர்த்தாக்களும் இங்ஙனே தந்தமக்கு மகிழ்வு நேர்ந்ததைத் தெரிவித்துக் கொண்டால் அதில் அஸூயை கொள்வோமல்லோம் நாம். அதெல்லாம் அஸம்பாவிதம் என்று நெஞ்சில் ஒரு மூலையிலும் நினைப்போமல்லோம். அவரவர்கள் தம் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்வதில் என்ன தடை?

மார்கழி மாதத்திடையில் நேர்ந்த மூன்று ஞாயிற்றுக்கிழமைகளில் சில விடங்களில் சில மஹான்கள் கூடி திருப்பாவை ஸதஸ்ஸென்று நடத்திவைத்தார்கள். ஆங்கும் அந்வயிக்க நேர்ந்த போது சில மஹான்களின் சுவை மிக்க ப்ரவசனங்களைக் கேட்டு ஆனந்திக்கவும் ப்ராப்தமாயிற்று. மார்கழிமாதப் பிறப்புக்கு முன் சென்னை வாஸிகளான சில மஹான்களிடமிருந்து அன்பார்ந்த கடிதங்கள் பல நமக்குக் கிடைத்தன. சிலர் எழுதியதாவது ''வருஷம் பன்னிரண்டு மாதங்களும் மார்கழி மாதமாகவே இருந்திடக் கூடாதா!'' என்று. சில மஹான்கள் எழுதியிருந்ததாவது ''இந்த மார்கழி மாதம் இல்லாமலே இருந்திடக் கூடாதா!'' என்று. இதன் கருத்தைச் சிறிது சிரமப்பட்டேயறிந்தோம். பன்னிரண்டு மாதங்களும் மார்கழி மாதமாகவேயிருந்திடக் கூடாதா என்றவர்களின் கருத்து வருஷம் பூர்த்தியாகவே ஆனந்தாநுபவம் பண்ணலாம் என்பது. மார்கழி மாதம் அடியோடு இல்லாமலே இருந்திடலாமே என்றவர்களின் கருத்து ''தே தம் புக்த்வா ஸ்வர்க்க லோகம் விசாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி'' என்று கீதையிற் கூறிய படியே சில நாட்கள் ஆனந்தாநுபவம் பண்ணிப் பல நாட்கள் துக்காநுபவமாயிருப்பதைவிட இரண்டுக்கும் ப்ரஸக்தி யில்லாமலிருக்கலாமே! என்பதாம். திருவாய்மொழியில் *நல்குரவும் பதிகத்தில் ''புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென்றிவையாய்'' என்றபடி ஸம்யோக விப்ரயோகங்கள் தவிர்க்க முடியாதவை யன்றோ! மார்கழி முடிந்த பிறகு சில பல மஹான்களின் கடிதங்கள் கிடைத்து வருகின்றன. அவற்றில் ஒரு கடிதத்தையே இங்கு வெளியிடுகிறோம்.

# கடிதம்

K. V. NARASIMHAN & Co.,
Chartered Accountants.

சித்தூர்
16—1—1974

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

ஸ்ரீமதித்யாதிப்படி யெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமான் உ.வே. ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் நரசிம்மன் தண்டன் ஸமர்ப்பித்துச் செய்யும் விண்ணப்பம். உபயகுச லோபரி.

திருப்பாவை உபந்யாஸம் இந்த வருடத்தில் முப்பது நாள் பூராவாகவும் ஸ்வாமியின் கடாக்ஷத்தால் அடியேன் அநுபவிக்கும் பாக்கியம் ப்ராப்தமாயிற்று. ஸ்வாமி அரிய பெரும் விஷயங்களை மழை போல் வாரி வாரி வர்ஷித்தது அதிக மதுரமாயிருந்து எல்லோரும் மிகவும் அனுபவித்தோம். திவ்யப்பிரபந்த மென்ன, வேதசாஸ்திரங்களென்ன, இதிஹாஸங்களென்ன, புராணமென்ன, ஸ்ரீபாஷ்யாதிகளென்ன, பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளென்ன இவை யாவற்றையும் ஒன்று சேரக் கேட்டு ஆனந்தித்தோம். ஸ்வாமி மிக அனுபவித்துச் சொன்ன விஷயங்களை அடியோங்களும் அவ்வாறே அனுபவித்தோம். முப்பது நாளும் ஆயர்பாடியில் இருந்த படியே கண்ணபிரானுடைய குணசேஷ்டிதங்களைப் பூராவாகவும் கேட்டு ரஸித்தோம். ஸ்வாபதேசார்த்தங்களை ஸ்வாமி நிர்வஹித்த விதமே ஸ்வாமிக்கு ஏற்பட்ட தனிப்பாணி என்றால் மிகையாகாது.

ஸ்ரீவைஷ்ணவ உலகத்தில் ஸ்வாமியின் பெருமைகளை அறியாதாரில்லை. ஸ்வாமி எப்பொழுதும் திடகாத்ரமாகப் பல்லாண்டுகளாக எழுந்தருளியிருந்து மேலும் மேலும் ஸ்வாமியின் ப்ரவசனத்தை அடியோங்கள் கேட்டு ஆனந்திக்க எம்பெருமான் கடாக்ஷிப்பாராக.

வேணும் தாஸன்,
கே. வி. நரஸிம்மன்.

# பழைய சிந்தனைகளில் ஒன்று

சென்னையில் திருப்பாவை ப்ரவசனம் ஆரம்பித்த காலத்தில் (அதாவது 1931-32 முதலிய சில வருஷங்களில்) கீர்த்தி மூர்த்திகளான (Federal Court Judge) ஸர். S. வரதாசார்ய ஸ்வாமி (விசேஷண நிரபேக்ஷரான), மாம்பலம், மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி, தாக்ஷிணாத்ய கலாநிதி சாமிநாதையரவர்கள் முதலானோர் நியமேந கோஷ்டியை அலங்கரித்துக்கொண்டிருந்தனர். ஒரு வருஷம் திருப்பாவை சாற்றுமுறையன்று கோஷ்டி கலையும் ஸமயத்தில் "சனி ஞாயிறு தோறும் ப்ராப்தமாகும் ஆனந்தம் ஒரு தட்டாய் மார்கழிமாதத்து ஆனந்தம் ஒரு தட்டாய் இருக்கையாலே இவ்வானந்தத்தைப் பெறுவதற்கு இன்னும் ஒரு ஸம்வத்ஸரம் காத்திருக்கவேணும்" என்று ஒரு மஹான் ப்ரஸ்தாவிக்க அப்போது S. வரதாசார்ய ஸ்வாமி ஸாதித்ததொரு வார்த்தை நெஞ்சைவிட்டகலாதது. (அதாவது) "மார்கழி மாதம் போக மற்றுள்ள மாதங்கள்

## தமிழ்நாடு கவர்னர் களம் ஸ்ரீ K. K. ஷா அவர்களின் விஜயம்



பதினொன்று. ஐப்பசி கார்த்திகையிலேயே இந்த பாரிப்புகள் நமக்கு உண்டாவதால் ஒன்பது பத்து மாதங்கள்தான் காத்திருக்கவேண்டும்'' என்று. இந்த வார்த்தையை நேற்று நாம் திருப்பாவை சாற்றுமுறை முடிவில அநுவதித்தபோது, அக்காலத்திலிருந்து தொடர்ச்சியாக அநுபவித்துவரும் ஒரு மஹான் ''இதை நான் அடிக்கடி நினைத்து வருவதுணடு. இது தங்களுடைய நினைவிலும் இருப்பதுபற்றி மிக வியக்கிறேன்'' என்றார்.



சென்னை ஸத்காலக்ஷேப ஸபா என்று ஏற்பட்டுள்ள ஸபையின் மூலமாக இந்த ப்ரவசனங்கள் நடந்துவருவனவாம். இதை மிக்க ச்ரத்தையுடன் நடத்திவருகின்ற ஸ்ரீமான் உ. வே. A. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், கொஞ்சேடி ஸுப்பராயலுசெட்டியார், கராலபாடி ராதாக்ருஷ்ணையா, A. V. கன்னைய நாயுடு, புலிபாடி ஸோமஸுந்தரராவ் முதலான ஆஸ்திக பக்த மணிகளுக்கு என்னுடைய மனமார்ந்த மங்களாசாஸனத்தைத் தெரிவித்து நிற்கிறேன். பலவாண்டுகளாக தினப்படியாய் லேட்டும் ஆப்ஸண்டுமில்லாமல் ஸேவை ஸாதித்துவந்த ஸ்ரீமதுபயவே. R. V. சேஷாத்ரி ஐயங்கார், K. திருவேங்கடாசாரியர் (advocates) முதலான பல பெரியார்களுக்கும் அடிக்கடி ஸேவை

ஸாதித்து வந்த ஸ்ரீமான் உ. வே. V. N. வெங்கட வரதாசார்யர் ஸ்வாமி, (அட்வகேட்) B.A., B.L., ஸ்ரீமதுபயவே. திருவல்லிக்கேணி K. S. சம்பகேசய்யங்கார் ஸ்வாமி, B.A., B.L., (ad.) ஸ்ரீ உ. வே. C. S. பார்த்தசாரதி ஐயங்கார் ஸ்வாமி, B.A. B.L., முதலானபெரியார்களுக்கும் இவ்வருஷம் விசேஷித்து ஸேவை ஸாதித்த ஸ்ரீ உ. வே. (க்வாலியர்) ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமிக்கும் நமது ஸத்காலக்ஷேப ஸபையார் நன்றி பாராட்டுதலைத் தெரிவித்தார்கள்.

## இவ்வாண்டில் ஒரு விசேஷ நிகழ்ச்சி



சென்னையில் திருப்பாவை ப்ரவசனம் ஆரம்பித்த நாள்முதல் இடையில் ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று திருவரங்கம் பெரிய கோயிலில் நடந்துவரும் அரையர் ஸேவையை நாம் அநுகரிப்பது வழக்கம். அது இந்த வருஷம் மார்கழி பத்தாந்தேதி முதலாக ஒவ்வொருநாளும் நடைபெற்றது. அதாவது—அரையர்கள் அணிந்து கொள்ளும் கிரீடத்தை யணிந்து தாளவிசையுடன் கொண்டாட்டங்கள் ஸேவிப்பது. ஒரு பாசுரத்திற்கு வ்யாக்யானம் ஸேவிப்பது. சில சில பாசுரங்கள் மூலம் ஸேவிப்பது என்கிற முறையில் தினப்படி இருபது நிமிஷகாலம் நடைபெற்றுப் பிறகு திருப்பாவை ப்ரவசனம் தொடக்கமாகும். இவ்வருஷத்து ப்ரவசனம் பூர்த்தியாக டேப் ரிகார்ட் செய்யப்பட்டுள்ளது. ஒலிப்பதிவு செய்துகொண்டவர்கள் (1) திருவல்லிக்கேணி M. A. வெங்கடக்ருஷ்ணன் (2) பக்தமணி கொப்பரம் நடேச செட்டியார் (Paper Merchant).

## மேலமாம்பலத்தில் திருப்பாவை வித்வத்ஸதஸ்ஸு

6—1—74 ஞாயிற்றுக்கிழமையன்று மேலமாம்பலத்தில் ஸ்ரீ சாரதா வித்யாலய ஹாலில் பகல் 11 மணி முதல் மாலை 5 மணி வரையில் திருப்பாவை வித்வத்ஸதஸ்ஸு மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் மடாதிபதியான ஸ்ரீமத் பரம ஹம்ஸேத்யாதி அப்பன் சடகோப ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் அக்ராஸனம் அலங்கரித்தருளியிருந்தார். பதினைந்து வித்வான்கள் திருப்பாவையில் தந்தமக்குத் தோன்றும் ரஸ விசேஷங்களைப் பற்றி மிக வினிமையாக உபந்யஸித்தார்கள். இந்த ஸதஸ்ஸு ஆண்டுதோறும் நடப்பதேயாயினும் இவ்வாண்டில் மிக விசேஷமாக நடைபெற்றது குறிப்பிடத்தக்கது. வித்வான்களுக்கு ஸம்பாவனையும் பீதாம்பரப் பரிசும் வழங்கப்பட்டது. இதில் அவரவர்கள் உபந்யஸித்த விஷயங்களை ஸாரமாக எழுதி யனுப்பும்படி கோரியிருக்கிறேன். கிடைத்தால் அடுத்த இதழில் அவை வெளியிடப்படும்.

இங்கு அடியேன் விண்ணப்பம் செய்த விஷயம் 'திருப்பாவை ஜீயர்' என்பது பற்றி. ஸ்வாமி எம்பெருமானர் சாரீரக மீமாம்ஸா பாஷ்யம் அருளிச்செய்து மிக்க பெரும் புகழ் படைத்தவர். ஆனல் அதில் சில குறைகள் காணகிடப்பனவாக்கும்.

அக்குறைகளாவன (1) தேவதா விசேஷத்தை நாராயண பதத்தாலே குறிப்பிடாமை. (2) நாராயணன் லக்ஷ்மீபதி என்று காட்டாமை. (3) நாராயணன் பல திருவவதாரங்கள் செய்திருக்கிறுன் என்று காட்டாமை. (4) எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை விவரித்துக் காட்டாமை. (5) கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்று விளக்காமை. இத்தகைய குறைகள் திருவாய்மொழி முதலிய மற்றுள்ள திவ்யப்ரபந்தங்களினுல் தீர்ந்தாலும் முப்பது பாட்டாலே ஸாரஸம்க்ஷேபமாகத் தெரிவித்த பெருமை திருப்பாவைக்கே உள்ளது.

(1) "நாராயணனே நமக்கே பறை தருவான்"
"நாயகப் பெண்பிள்ளாய் நாராயணன் மூர்த்தி"
"நாற்றத் துழாய் முடி நாராயணன்"......இப் பாசுரங்களினுல் தேவதா விசேஷமான நாராயணமூர்த்தி விளங்கக் காட்டப்பட்டது.

(2) "நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்" "செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால்" இத்தகைய பாசுரங்களினுல் லக்ஷ்மீபதித்வம் விளக்கப்பட்டது.

(3) *நந்தகோபன் குமரன்* *அசோதை யிளஞ்சிங்கம்* *ஓங்கி யுலகளந்த வுத்தமன்* *வள்ளல் பெரும் பசுக்களாற்றப் படைத்தான் மகன்* *ஒருத்தி மகனுய்ப் பிறந்து......இப் பாசுரங்களினுல் திருவவதாரம் செய்தமை காட்டப்பட்டது.

(4) திருப்பாவை முழுவதும் குணநுபவமே யாதலால் குணநுபவத்துக்கென்று தனிப்பாசுரம் காட்டவேண்டுமோ!

(5) "குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது" "உனக்கே நாமாட் செய்வோம்" இப்பாசுரங்களினுல் கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்று விளக்கப் பட்டது.

இவை மட்டுமேயன்று. எம்பெருமானர் தரிசனத்தவர்கள் அந்தரங்கமாக அநுபவிக்கும் ஸகலார்த்த விசேஷங்களும் திருப்பாவையில்தான் ஸூக்ஷ்மமாக விளங்குகின்றன வென்பதை விரிவாக உபபாதித்தேன். உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யர் என்று ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் வழங்கும் வ்யபதேசம் எம்பெருமானர் தொடங்கியே நிகழ்ந்து வருகின்றதென்பதையும் கீதாபாஷ்யகத்யத்ரயாதிகளால் பரக்க உபபாதித்தேன்.

**ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீமத்பரமஹம்ஸ எம்பார் ஜீயர் ஸ்வாமியின் அக்ராஸனம்.**



இந்த வித்வத் ஸபையை அந்நாள் தொடங்கி இந்நாள் வரைமிகுந்த ச்ரத்தையுடன் மிகச் சிறப்பாக நடத்திவருகிற ஸ்ரீ உ. வே. கபிஸ்தலம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமிக்கு எல்லாரும் பல்லாண்டு பாடினர்கள். —பத்ராதிபர்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம:

ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் மஹாமஹிமோபாத்யாய

**அண்ணங்கராசாரியர்**

எழுதிய

# மதுராந்தக ஸூரிமஸ்தகாபரணம்

## சுலோகங்கள்

வீரராகவ ஸூரிமஸ்தக வைபவம் கிமு வர்ண்யதாம்!
பூஷணம் பஹு லப்யதே! கலு தேந நித்ய மநர்க்களம்,
பாக்யமேதத் அநந்யலப்யம் இதீரயந்தி புதாஸ் ஸதா
நித்யமங்கள மேததாமிதம் அஸ்ய பாக்யமநுத்தமம்.

கிஷ்கிந்தா ஸமீபத்தில் எழுந்தருளாநின்றபெருமாளைக் கண்ட திருவடி "ஆயதாச்ச ஸுவ்ருத்தாச்ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷணபூஷார்ஹா: கிமர்த்தம் நவிபூஷிதா:?" என்று கேட்டதாகக் காண்கிறோம். நம் மதுராந்தக ஸ்வாமியின் திருமுடியைக் காண்பவர்கள் ஒருவரும் அங்ஙனம் கேட்கவேண்டாதபடி நித்யமும் விலக்ஷணபூஷண பூஷிதமாகி வருவது அத் திருமுடியின் அப்ரமேயபாக்ய விசேஷமாகும். இந்த பாக்யம் நித்யமங்களசாலியாய்க் கொண்டு விளங்க வேணும். (ச்லோகத்தில் "நித்யமங்களம்" என்றது பஹுவ்ரீஹி கர்ப்பம்)

மதுராந்தக ஸூரிவர்ய ஹே மம மித்ரப்ரவரப்ரகாண்ட ஹே.
பவதச் சிரஸா க்ருதம் து யத் ஸுக்ருதம் தத் க்ருபயா ப்ரபோதய.

நம்மாழ்வார் திருவிருத்தத்தில் "மேகங்களோ உரையீர் திருமால் திருமேனியொக்கும் யோகங்களுங்களுக் கெவ்வாறு பெற்றீர்?" என்று மேகங்களை நோக்கிக் கேள்வி கேட்டார். அக்கேள்வி தன்னையே ப்ரகாராந்தரேண பெரியதிருவந்தாதியில் "தங்கா முயற்றியவாய் தாழ்விசும்பின் மீதுபாய்ந்து எங்கே புக்கெத்தவம் செய்திட்டன கொல், பொங்கோதத் தண்ணம் பால் வேலை வாய்க் கண்வளரும் என்னுடைய கண்ணன்பால் நன்னிறங் கொள் கார்" என்ற பாசுரத்தினால் வெளியிட்டார். அதேபோல் ஸ்ரீமதுராந்தக மித்ர மணியை நோக்கிக் கேட்கிறேன்—"தேவரீருடைய திருமுடி அடிக்கடி அநர்க்கபூஷணங்களைப் பெற்றணிந்து திகழுமாறு செய்திட்ட தவமென்கொல்!" என்று.

மதுராந்தக ஸுஹ்ருதுத்தம சிரஸஸ் தவபாக்யம்
வசஸோபி ச மநஸோபி ச விஷயோ நஹி ஹந்த!
திவஸேச்வர ரஜநீச்வர கிரணாவதி தத்ஸ்யாத்
ப்ரதிவாஸர மதிகாதிக விபவோஜ்ஜ்வல மூர்வ்யாம்.

நம் மதுராந்தக நண்பரது திருமுடிபெற்ற பாக்யம் வாக்குக்கும் நெஞ்சுக்கும் எட்டாததந்தோ! ஸூர்யசந்த்ரர்களின் ஒளிவீசுமளவும் இந்த பாக்யம் இவ்வுலகில் நாடோறும் மிகமிக மேன்மைபெற்றுப் பொலிக! பொலிக!! பொலிக!!!

எம்பெருமானுர் சரணுகதி கத்யத்தில் ஆபரண சூர்ணையில் எம்பெருமானு டைய திருமுடிக்கு மூன்று பூஷணங்கள் அருளிச் செய்தார் (கிரீட—மகுட—சூடாவ தம்ஸ) என்று. அவ்வாறே நமது மதுராந்தக நண்பரும் தமது திருமுடிக்கு மூன்று பூஷணங்கள் பெறப்பெற்ருர். (1) பரவாதி சிரோபூஷா. (2) மதுராந்தக மித்ர மஸ்தகபூஷா. (3) மதுராந்தக ஸூரிமஸ்தகாபரணம். மேன்மேலும் வருமவற் றின் திருநாமங்களை எம்பெருமான் திருவுள்ளமுணரும்.

---

சிரந்தந ஸுஹ்ருந்மணியும் ஸஹ்ருதயவரேண்யருமான ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம் வீரராகவாசார்யஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் செய்யும் விண்ணப் பம். [இது தேவரீருக்கு அடியேன் தபால்மூலம் அனுப்ப நினைத்த விண்ணப்பம். ஆயினும் இஃது உலகமறிய விளங்கவேணுமென்று தோன்றியதனுல் ஸ்ரீராமாநுஜ னிலேயே ப்ரசுரிக்க ப்ராப்தமாகிறது.] ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் எம்பெருமானுடைய ஒரு பன்னிரண்டு திருக்குணங்களை யடுக்கி ஒரு ச்லோகரத்னம் அருளிச்செய்துள்ளார். [வசீவதாந்யே ருகுணவாநித்யாதி]. இதில் நான்காவது குணமாக (ருஜு) என்றுள்ளது. ஆர்ஜவ முடையவன் என்றபடி. மனமொழி மெய்கள் ஒன்றி நிற்கையாகிற செம்மையைச் சொன்னபடி. "கரண த்ரய ஸாரூப் யம் இதி ஸௌக்ய ரஸாயநம்" என்ருர் ஸ்வாமி தேசிகன்.

பஞ்சவடியில் பெருமாளுடைய ஆச்ரமத்திற்கு வந்த சூர்ப்பணகை குடில மான புத்தியோடு ஏதோ சில கேள்விகள் கேட்டிருக்கச் செய்தேயும் பெருமாள் தம்முடைய இயற்கையான ஆர்ஜவத்தை சிறிதும் நெகிழவிடாமல் மறுமொழி கூறினர் என்பதைத் தெரிவிக்கின்ற வான்மீகி முனிவர் "ருஜு புத்தி தயா ஸர்வம் ஆக்க்யாதுமுபசக்ரமே" என்ருர். இங்கு, 'பெருமாள் பதிலளித்தார்' என்று ஸாமான்யமாகச் சொல்லிவிடாமல் "ருஜுபுத்திதயா" என்று விசேஷித் தது விவேகிகளால் குறிக்கொள்ளத்தக்கதாம்.

வானரமுதலிகள் இலங்கையில் புகுந்து அடைமதிட்படுத்தின பின்பு கும்பகர்ணனை அகாலத்தில் எழுப்பவேண்டியதாயிற்று. மிகவும் சிரமப்பட்டு எழுப்பப்பட்டவவன் 'எதற்காக இப்போது என்னை எழுப்பினீர்கள்?' என்று கேட்க "சீதையை அபகரித்துவந்ததன் பலன் கொடிதாக அணுகிவிட்டது. இப்போது நாம் என்ன செய்யவேண்டும் என்பதைக் கேட்கவே எழுப்பினேம்" என்று இராவணன் கூற, அதற்குக் கும்பகர்ணன் கூறிய பதிலைக் கம்பர் பெருமான்— "சிட்டர் செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய், மட்டவிழ் மலர்க்குழலினுளை இனி மன்னு! விட்டிடுதுமேல் எளியமாதும் அவர் வெல்லப்பட்டிடுதுமேல் அதுவுநன்று பழியன்ருல்" என்கிற செய்யுளினல் அற்புதமாக அமைத்துள் ளார். [இதன் கருத்து] இராவணு! நமது குலத்தின் பெருமை ஒப்புயர்வற்றது. அதனை நீ சிறிதும் தெரிந்து கொள்ளாமல் அதர்க்கணச் செயலைச் செய்தாய். நீ செய்த செயல் சிறிதும் யுக்தமன்று. பிராட்டியை இராமன்பக்கலில் கொண்டு ஸமர்ப்பித்துவிடுவதே நன்று. ஆனல் அப்படி ஸமர்ப்பிப்பது நமக்கு இளப்ப மான செயலே ஆகும். ஆதலால் யுத்தம் செய்யவே வேண்டும். யுத்தத்தில் நாம் மாளவே போகிருேம். அது நமக்குப் பழிப்பாகாது, புகழேயாகும். இராம

பிரானது திருக்கைகளால் கொலையுண்டோம் என்கிற புகழ் நமக்கு நீடூழி நிற்கும்'' என்பதாம். இச் செய்யுளில் ''சிட்டர் செயல் செய்திலை—குலச்சிறுமை செய்தாய்'' என்ற முதலடி மிகவற்புதமானது.

இராவணனுக்கு உபதேசங்கள் செய்தருளும் பிராட்டி ''இஹ ஸந்தோ ந வா ஸந்தி ஸதோ வா நாநுவர்த்தஸே'' என்றாள். இராவணா! இவ்விலங்கையில் எல்லாப் பொருளையும் சேமித்து வைத்திருக்கிறாய். உனக்கு நல்லுபதேசம் செய்யவல்ல ஸத்துக்களைச் சேமிக்கவில்லையே, ஆயினும் விபீஷணாழ்வான் ஒருவன் போதுமே, அந்த ஸத்புருஷனை அநுவர்த்தித்து உஜ்ஜீவிக்க உனக்கு பாக்கியமில்லையே என்று வருந்திக் கூறினாள்.

இங்ஙனே பலபல விஷயங்கள் என் நினைவுக்கு வருகின்றன. அவற்றை யெல்லாம் இங்கெழுத அவகாசமில்லை. தேவரீர் அறியாதனவுமல்ல. சிஷ்டாக் ரேஸரரான தேவரீர் சில சிறார்களைக் கிளப்பிவிட்டு சிலநிந்தைக்கந்தைகளை வெளி யிடுவித்து இதனால் க்ருதக்ருத்யராகப் பார்ப்பது சிறிதும் யுக்தமாகாது. இன் றைய போஸ்டில் ''அஸூயாபிண்டத்தின் ஆகாசதாண்டவம்'' என்கிற அநும தேயக்கந்தை யொன்று கிடைத்திருக்கிறது. இதில்தேவரீருடைய பெருமை ஒரு பகுதியாயும் அடியேனைப்பற்றிய நிந்தை மற்றொரு பகுதியாயும் அமைந்துள்ளது. ''தண்ணீர்ப் பாம்பானாலும் தடியெடுத்தடித்துத் தொலைத்திடு'' என்றும் ''குட்டித் தேளானாலும் கொடுக்கையறுத்துவிட்டிடு'' என்றுமுள்ள பழமொழிகளை நான் ஒருபோதும் மறப்பவன் அல்லேன். ஏற்கெனவே மார்கழிமாதத்தில் தேவரீரும் அக்னிஹோத்ரியும் சேர்ந்து வெளியிட்ட இரண்டு நிந்தைக்கந்தைகளுக்கு அப் போதே விடையிறுத்தாயிற்று. இவ்விதழிலும் அதன்ஸாரம் வெளிவரும். இப் போது கிடைத்துள்ள நிந்தைக்கந்தைக்கும் மேலேவிடை தருவோம். அதுநிற்க.

உலகத்தில் சாஸ்த்ரார்த்தசர்ச்சைகளும் ஸம்ப்ரதாயார்த்தசர்ச்சைகளும் விளைவது ஸஹஜம். ஸ்வாமி தேசிகன்காலத்தில் ''அஸிநா தத்த்வமஸிநா பரஜீவ ப்ரபேதிநா, வித்யாரண்யமஹாரண்யம் அக்ஷோப்யமுநிரச்சினத்'' என்கிற ச்லோகரத்னம் திருவவதரிக்கும்படி சர்ச்சை நடந்திருப்பதைஅறிகிறோம். இங் ஙனே அந்நாள் தொடங்கி இந்நாளளவும் எண்டிசையிலும் மதசர்ச்சைகள் நிகழ்ந்து வருவதுண்டு. ''நிந்தாபிச் சேஷபூரணம்'' என்பது சில பாமரர்களுக்கு உற்றதே யாகுமத்தனை யொழிய ஞானநுஷ்டான ஸம்பன்னராகிய தேவரீருக்கு உற்றதாகுமா? ஆகாது. ஆகாது. ''இந்த நிந்தைக் கந்தைகளில் அடியேனுக்குச் சிறிதும் அந்வயமில்லை'' என்று தேவரீர் ஸாதித்துவிடக்கூடும். ஸாதித்துவிட்டால் அதை அஞ்சலி பந்தத்துடன் ஏற்றுக்கொள்ளுகிறேன். தேவரீருடைய ஸொந்த திருநாமத்தையிட்டு அச்சிட்டு மார்கழி மாதத்தில் எனக்கனுப்பிய 'ஸூதோக்தி ஸாரஸ்ய ப்ரகாசநம்' என்ற (8 பக்கமுள்ள) சுவடியை 'என்னுடைய வெளியீடன்று' என்று தேவரீர் மறுக்கமுடியாதன்றோ? அதிலுள்ள பூர்வாசார்ய நிந்தைகளுக்கும் என்னைப்பற்றின தூஷணைகளுக்கும் விடையாக உடனே (ஒருவாரத்திற்குள்ளே) 'மது ராந்தக மித்ரமஸ்தகபூஷா' என்கிற நூலை வெளியிட்டிருக்கிறேன். அதில், மார்சழி மாத முடிவுக்குள் இதற்கு விடை ஸாதிக்கவேணுமென்று வற்புறுத்தியுமிருக்கி

றேன். (அந்த விடைப்ரஸாதமாகவே இப்போதைய நிந்தைக்கந்தை வெளிவந்திருக்கின்ற தென்பதை உலகமுணரும். அது நிற்க.)

தேவரீர் தலையிடவேண்டாத விஷயத்தில் வீணுகத் தலையிட்டு தத்தக பித்தக தாலேலோ என்னுமாறு சில எழுதி வெளியிட்டிருந்தபடியால்தான் அதை மறுக்க நான் முற்பட்டேன். எனது மறுப்புகளுக்கு ஏகதேசமும் விடையிறுக்காமல் "வெற்றிக்கொடி நாட்டிவிட்டேன்"—"ஜயபேரி அடித்துவிட்டேன்"—என்று தேவரீர் பாமரவஞ்சனையாகச் சில வெழுதி வெளியிட்டபடியால் அதன்மேல் தீவிரமாக நான் பதில் எழுதி வெளியிட நேர்ந்தது. "அசக்தா உத்தரம் வக்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே" என்கிற ரீதியை அவலம்பிப்பதைத் தவிர வேறு தஞ்சமில்லை என்று துணிந்து சில்லரை சேஷ்டைகளைச் செய்யத் துணிந்திருக்கிறீர். இந்த சேஷ்டைகள் யாருடையனவாக ஆயினும் ஆகுக. மாககாவ்யம் இரண்டாம் ஸர்க்கத்தில்—"விதாய வைரம் ஸாமர்ஷே நரோரௌ ய உதாஸதே, ப்ரக்ஷிப்யோதர்ச்சிஷம் கக்ஷே சேரதே தேபிமாருதம்" என்றுள்ள ச்லோகம் தேவரீர் அறியாததன்று. விவாதமென்று ஒன்று தொடங்கிவிட்டால், அதுதானும் தொடர்ந்தும் சென்றால் ப்ரஸ்துதமான சோத்யங்களுக்கு ப்ரத்யுத்தர ப்ரகாசனம் பண்ணியேயன்றோ உய்யவேண்டும்! தேவரீரை நோக்கி அடியேன் கேட்டிருக்கும் கேள்விகள் இன்று நேற்று தோன்றியவையல்ல. ஏறக்குறைய ஆறேழு வருஷங்களாக உலகமறிய நின்றன. அவற்றுக்குத் தேவரீர் விடையிறுத்தே தீரவேண்டிய கடமையுடையீர். ஸ்ரீபெரும்பூதூரில் நமக்குள் நடந்த ஸம்பாஷணை பொய்யாகவே யிருக்கட்டும் என்றும் அப்போது நான் தேவரீரைக் கேட்டதாக வெளிவந்திருக்கிற பத்தெட்டு கேள்விகளுக்கு தேவரீர் விடையிறுத்தே யாகவேணுமென்றும் நான் பரக்க வெழுதி "மதுராந்தக மித்ர மஸ்தக பூஷா" என்கிற நூலினால் உலகமறிய வெளியிட்டிருப்பதை தேவரீர் நோக்கியருளவில்லையா? மார்கழித் திங்களில் அது தனி ஸஞ்சிகையாக வெளிவந்தது. உலகமெங்கும் பரவும் மாதாந்த ஸஞ்சிகையிலும் அந்த மஸ்தக பூஷாவை இப்போது வெளியிடுகிறேன். தேவரீர் ஆர்ஜவத்துடன் பதில் எழுதி வெளியிட்டுவிட்டால் இதுகாறும் நான் நான்கு பாஷைகளிலும் எழுதி வெளியிட்டுள்ள நூல்களையெல்லாம் கிழித்தெறிந்துவிட்டு அஜ்ஞாதவாஸம் செய்யக்கடவேன் என்கிற சபதத்தை மீண்டுமீண்டும் செய்கிறேன். என்னுடைய கேள்விகளை ஜிகீஷுப்ரச்நங்களாகக் கொள்ளாமல் ஜிஜ்ஞாஸு ப்ரச்நமாகவே கொண்டு-திருவடி பணிந்து ஒரு அந்தேவாஸிசெய்யும் அநுயோகமாகவேகொண்டு-விடையிறுக்கவேண்டிய கடமை தேவரீருக்கு இல்லையா? இதில் தென்கலை வித்வான்களில் ஒருவரையும் நான் மத்யஸ்தராகக் குறிப்பிடவில்லை. தேவரீருடைய ஸொந்த ஸ்ரீக்ராமத்துக் கலாசாலையில் விளங்கும் வித்வான்களையே மத்யஸ்தர்களாகக் கோரியிருக்கிறேன். "அவர்கள் மடந்து ஸம்ப்ரதாயஸ்தர்களாகையாலே பக்ஷபாதிகளாவர்" என்று திருவுள்ளமாகில் திருவிண்ணகரில் வாழும் ஸ்ரீமதுபயவே. விவேகி வித்வத் ஸார்வபௌமரான ஸ்ரீராமதேசிகாசார்யரையே மத்யஸ்தராய்க் கொள்வீராக! எந்த விஷயத்தைப்பற்றின சர்ச்சையை இப்போது நான் கொள்ளுகிறேனென்றால் ஏற்கனவே ஆறு வருஷங்கட்கு முன் தேவரீர் வெளியிட்ட ஸம்ப்ரதாயஸுதா என்ற சுவடிக்கு அன்றே அப்போதே அந்த க்ஷணத்திலேயே

நான் வெளியிட்ட ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய மென்னும் நூலில் முந்துற முன்னம் ப்ரஸ்தாவித்திருக்கிற விஷயத்தைப் பற்றியே. (அதை வித்வான்களுக்குச் சிறிது நினைவூட்டுகிறேனிங்கு. அந்த ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய பங்க்திகளையே அநுவதிக்கிறேனிங்கு.

''உலகில் க்ரந்த மெழுதக் கைவைப்பவர்களுக்கு அபாதிதமான சாஸ்த்ரவ்யுத்பத்தியும் ஸாஹித்யவ்யுத்பத்தியுமிருக்கவேண்டும். *சதிரமென்று தம்மைத் தாமே சம்மதித்து* என்று திருவாய்மொழியிலருளிச்செய்கிறபடி தம்மைத்தாமே க்ரந்த சதுஷ்டயாதிகாரியாக நினைத்துக்கொள்வதிலும் வெளியிட்டுக்கொள்வதிலும் சிரமமில்லை. இவருடைய வ்யுத்பத்தி எத்தகைத் தென்பதை முன்னம் ஒரு சிறு விஷயத்தில் விளக்கிவிடுகிறேன். 'லக்ஷ்மி உபாயத்வஸம்ரக்ஷணம்' என்கிற ஆறுமதிகாரத்தில் ச்ருதப்ரகாசிகாசார்யருடைய சரணாகதிகத்யபாஷ்யத்திலிருந்து ஒரு பங்க்தியை யுதாஹரித்து அர்த்த மெழுதுகிற அழகைக் காண்மின்;

''ச்ரியம் ப்ரபத்ய தத்ஸந்நிதௌ மூலமந்த்ரேண ஸ்வரூபாநுரூப
புருஷார்த்த ப்ரார்த்தநம் தது பாயப்ரார்த்தநாபர்யந்தம் க்ருத்வா''

என்பது இவருதாஹரித்த ஸ்ரீஸூக்தி. இதன் பொருளென்னவென்றால், பெரிய பிராட்டியாரைப் பணிந்து அவள் பக்கலிலே பகவத்கைங்கர்யமாகிற ஸ்வரூபாநுரூப புருஷார்த்தத்தையும், அதற்கு உபாயமான *சரணாகதி நிஷ்பத்தியையும் ப்ரார்த்தித்து-என்பது. இது தவிர வேறு எந்த பொருளுங் கிடையாது.*பகவந்நாராயணாபிமதேத்யாதியாலே பிராட்டியைப் பணிந்தவுடனே *பாரமார்த்திகேத்யாதி சூர்ணையில் ''நித்ய கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா* என்றும் *பகவச்சரணாரவிந்த சரணாகதி:...அஸ்து மே* என்றுமுள்ள ஸ்ரீஸூக்தியினால் ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமும் அதற்குறுப்பான (சரணாகதியாகிற) உபாயத்தின் நிஷ்பத்தியுந்தானே ப்ரார்த்திக்கப்பட்டிருக்கிறது! ஸம்ஸ்க்ருத ஜ்ஞான முள்ள யாரும் இதைத்தான் பொருளாகக்கூறுவர். ஸ்ரீரங்கதிலகரான ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதியிலோ மற்றும் எந்த மஹானுடைய ஸன்னிதியிலோ கேட்டுப்பார்க்கலாம். இது ஸம்ப்ரதாய பேதவிசார விஷயமன்று. எந்த மதஸ்தரும் விமர்சிக்கக்கூடிய பொது விஷயமேயிது. வ்யுத்பத்தி பரீக்ஷணமிது.

நம் மதுராந்தகர் என்ன பொருளுரைக்கிறாரென்று பாருங்கள்; ''பிராட்டியின் பக்கல் புருஷார்த்த ப்ரார்த்தனமும் உபாயத்வ ப்ரார்த்தனமும் செய்து'' என்று எழுதியுள்ளார். தலைமேல் லக்ஷ்மி உபாயத்வ ஸம்ரக்ஷணம் என்று மகுடமிட்டிருக்கிறார். லக்ஷ்ம்யுபாயத்வத்தை ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸாதித்துவிட்டதாக மருண்டுவிட்டார். ஐயோ பாவம்! இவரெடுத்த ஸ்ரீஸூக்தியில் 'உபாய ப்ரார்த்தநா' என்றிருக்கிறதேயொழிய 'உபாயத்வப்ரார்த்தநா' என்றில்லை. உண்மையில் ஸ்ரீஸூக்தியும் அங்ஙனே கிடையாது, இவரும் அங்ஙனே யுதாஹரிக்கவில்லை. 'உபாயப்ரார்த்தநா' என்பதற்கு உபாயபூதவஸ்துவின் ப்ரார்த்தநையென்று அர்த்தமேயல்லது உபாயத்வப்ரார்த்தநையென்று ஒருநாளும் அர்த்தமாகாது. தர்மதர்மிஜ்ஞானமில்லாத நையாயிகர்கள் பலருளர்; அன்னவர்கள் ''பூதலே கடத்வஸ்ய வர்த்தமாநாத்'' என்றும் ''கடபூதலவர்த்தநேத்வாத்'' என்றும் சொல்லிக்

கொண்டு அட்டஹாஸம் செய்வர்கள். தர்க்கரத்ந—ந்யாயகேஸரி பிருதாலங்க்ருத ரான இவரும் *சின்னிவீராதாதமென்று நாம் பலகால் உதாஹரிக்கும் நையாயிக ருக்கு 'கிம் கநிஷ்ட: கிமு ஜ்யேஷ்ட:' என்னத்தகுந்தவரே. இதில் ஸந்தேஹகந்தமு மில்லை.'' (ஆக இவ்வளவும் முதன்முதலாக எழுதிப் பலகால் அநுவதிக்கப்பட்டது.)

இனி, பொதுவாக வித்வான்களுக்குத் தெரிவிக்கிறேன்.

பிராட்டிக்கு உபாயத்வத்தை ஸ்தாபிக்க இவர் விரும்பினால் அந்த விருப் பத்தை நாம் தூஷிக்கிறோமல்லோம். அந்த விருப்பத்திற்கேற்ப எத்தனையோ ப்ரமாணங்களைக் கொள்ளலாமிவர். சரணாகதிகத்ய ச்ருதப்ரகாசிகா ஸூக்தியைக் கொண்டு இவர் எழுதியிருக்கும் விஷயம் இருளும் மருளும் துயக்கும் மயக்குமே விளங்கநின்றதென்பதை எந்த வித்வத்ஸதஸ்ஸிலும் தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல் எடுத்துரைப்பேன். ''இந்த பங்க்திக்கு இப்படித்தானா அர்த்தம்?'' என்று நான் பல வடகலை வித்வான்களைக் கேட்டதுண்டு. அவர்கள் சொன்னதா வது. ''கர்மேண சர்மாப்யாம் கர்மை: என்று ஒருவர் சொன்னால் அதில் வியக்க வேண்டியிராது. மேலெடுத்த ஸ்ரீஸூக்திக்கு மதுராந்தகர் உரைக்கும் அர்த்தம் ''ப்ராரப்த முத்தமகுணாநபரித்யஜந்தி'' என்றதற்கு உத்தமர்களையும் ப்ராரப்த கர்மம் விடாது என்று ஒரு பண்டிதர் சொல்லிக்கொண்டிருந்த அர்த்தத்துக்கே தோள் தீண்டியாயிருக்கும்'' என்று.

இடையில் ஆறேழு வருஷகாலம் வாயைக்கையைத் திறக்க முடியாமல் வாளாவிருந்துவிட்டு நேற்றைய மார்கழி மாதத்தில் ஏதோ நினைத்துக் கொண்டு—யாராலோ தூண்டப்பட்டு இதற்குத் தாம் ஸமாதானம் கூறுவ தாக எழுந்தார். அவர் எழுதிக் கொண்டிருப்பதும் நான் எழுதிக்கொண் டிருப்பதுமாகக் கால முள்ளதனையும் செல்லலாம். லவணம் என்பதற்கு எருமைச் சாணிதான் அர்த்தம் என்று சொல்லிப் போராடுகிறவர், போஜனத்தின் முடிவில் லவணமாநய என்று சொன்னபடியாலே அப்போது உப்புக்கு ப்ரஸக்தி யில்லை என்றும் உச்சிஷ்ட ஸ்தல சுத்திக்கு எருமைச்சாணிதான் ப்ரஸக்தம் என்றும் ஆகவே அங்கு லவண சப்தார்த்தம் எருமைச் சாணிதான் என்று வாதிக் கவும் கூடும். ப்ரக்ருத சர்ச்சையில் ததுபாயப்ரார்த்தநா இத்யாதி ஸூக்திக்கு இவர் கொண்ட பொருளையுங் கொள்ளலாமென்று ஒரு அக்ஷராஸ்யரும் தலையாட்டமாட் டார். தஞ்சாவூர் பொம்மைகளில் தலையாட்டு பொம்மை யென்று ஒன்றுண்டு. அது கூட இதற்குத் தலையாட்டாதென்பது ஸத்யம். வீணான இந்த விவரணம் வளர்ந்து செல்லாமைக்காகவே மத்யஸ்த வித்வான்களை நாம் குறிப்பிட்டது. அந்த வழியில் ஆர்ஜவமாகச் செல்லுவதற்குச் சரக்கில்லாமையாலே அநாமதேயநிந் தைக் கந்தைகளை வெளியிட்டு உய்வது தவிர வேறு வழியில்லையென்று முடிவு செய்து கொண்டார்.

''நதீம் திதீர்ஷு: ததுபாய ப்ரார்த்தநாம் சகார நாவிகஸ்காசே'' என்றொரு வாக்யஸந்நிவேசம் கொண்மின். ஆறு கடக்க வேண்டினவன் அதற்குரிய உபா யத்தை ஓடக்காரனிடம் வேண்டினான் என்பது இதன் பொருள். இங்கு வேண்டப் பட்ட பொருள் யாது? ஓடக்காரனை உபாயமாக இருக்கும்படியாகவா வேண்டப் படுகிறது? ஆற்றைக் கடப்பதற்கு உபாயமான ஓடம் வேண்டப்படுவதாகப்

பொருள் படுமேயல்லது ஓடக் காரனிடத்தில் உபாயத்வத்தை ப்ரார்த்திப்பதாகப் பொருள் கூறும் மேதாவி ஜம்பூத்வீபே பாரதவர்ஷே, பரதகண்டே மேரோ: பார்ச்வேஷு எங்குமிருக்க மாட்டார். காவ்யம் வாசிக்கிற வித்யார்த்திகூட மருள்வதற்கு இடமல்லாத இவ்விடத்தில் வித்வான் என்று பெயர் சுமக்குமொருவர் மருள்கிறார் என்றால் இதனில் மிக்கோர் அயர்வுண்டே! நம் மதுராந்தகர் மற்ற விஷயங்களை விட்டிட்டு இவ்வொரு விஷயந் தன்னையே முக்கியமாகக் கொண்டு போராடட்டும். மீண்டும் சொல்லுகிறேன். அமுதனார் நூற்றந்தாதியில் *ஞானங் கனிந்த பாசுரத்தில் எம்பெருமானார்க்கு அருளிச்செய்த மோக்ஷப்ரதத்வம் பிராட்டி பக்கலிலே அஸம்பாவிதமன்று. அத்தகைய உபாயத்வத்தை மறுப்பார் யாருமில்லை. அதற்காக இவர் ச்ரமப்படவேண்டா. விவாதாஸ்பதமான ஸ்ரீஸூக்திக்கு இவர் கொண்ட பொருள் வருஷசதமானாலும் வெற்றிபெறுதென்பது திண்ணம். செத்தபாம்பை எத்தனை நேரம் அடிப்பது! மூலத்தில் என்ன ப்ரார்த்தனை இருக்கிறது என்பதைக் காணக்கூடவா கண்ணில்லை?

இவருக்கும் நமக்கும் விளைந்த வாதங்களில் பலபல தேசிக திவ்யஸூக்திகளைக் குறிப்பிட்டு இவற்றுக்குப் பொருள் பணித்தருளவேணும் என்று விநயத்துடன் விஜ்ஞாபித்திருந்தேன். இப்போது இவர் வெளியிடுவித்த நிந்தைக் கந்தையில் ஆறுவது பக்கமொன்றைக் காலியாக விட்டிருக்கிறார். காகிதப்பஞ்சமுள்ள இக் காலத்தில் அந்த ஒருபக்கத்தின் விலை 15 ரூபாயாகும். அந்த ஒருபக்கத்திலேயே இவர் தெரிவிக்கவேண்டிய ஸமாதானங்களை ஸாரமாகத் தெரிவித்திருக்கலாம். அந்தோ! சரக்கில்லையே! இவரும் இவர்போல்வாரும் எத்தனை நாள்கூடி எத்தனை பக்கமெழுதி வெளியிட்டாலும் அவற்றில் சாஸ்த்ரீய விஷயமென்று ஒன்றுகூட தலைகாட்டகில்லாதென்றும் திருப்பித் திருப்பி நிந்தைகளையே பொழிந்துகொண்டிருக்கலாமென்றும் எத்தனை தடவை நாம் எழுதியிருக்கிறோம் தெரியுமா? இப்போது சிற்சில கேள்விகளையே கேட்டு நிற்கிறேன். ஸ்வாமி தேசிகன் ந்யாஸ தசகத்தில், "ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்" என்றருளிச் செய்திருக்கிற ச்லோகம் எவ்வளவு கம்பீரமானது! எவ்வளவு பரமார்த்த ஸாரமானது!! இதில் பூர்வார்த்தத்தை விட்டுவிடட்டும். உத்தரார்த்தத்தை மட்டும் எடுத்து விவரிக்கட்டும். இந்த ச்லோகத்தைப் பிறர் விவரிக்கவேண்டாதபடி ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸார சரமச்லோகாதிகாரத்தில் ஸ்வாமி தாமே அற்புதமாக விவரித்துள்ளார். அந்த ஸ்ரீஸூக்திகளை நூறுதடவை உதாஹரித்துக் காட்டியுள்ளேன். இங்கும் உதாஹரிக்கிறேன்.

"*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதியோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்

டித்து அவனுல் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம்போலே அண்ணுந்திருக்கிற விவனே ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனுடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசித மன்று...* என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே* யென்றும் *இசைவித்தென்னை யுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே* யென்றுஞ் சொல்லுகிற படியே உபாயபூதனுன அவன் செய்விக்கச்செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனுேடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்.''

மதுராந்தக மஹாஸ்வாமிந்! இந்த தேசிக திவ்யஸூக்திகளுக்கு ஆர்ஜவம் குன்றுமே பொருள் கூறுமென்று அடியேன் தேவரீரை நோக்கி எத்தனை தடவை சேட்டிருக்கிறேன். வாய் திறந்ததுண்டா? கை திறந்ததுண்டா? திறக்கப்போவதுதானுண்டா? தேவகிப் பிராட்டி கண்ணபிரானை நோக்கி ''ஒன்றும் கண்டிடப்பெற்றிலேனடியேன் காணுமாறினி உண்டெனிலருளே'' என்று கண்ணநீர் பெருக்கிக்கொண்டே வேண்டுகிறுள். அடியேனும் அப்படியே வேண்டுகிறேன். ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு எத்தனை வ்யாக்யானங்கள்? எத்தனை உரைகள்? எத்தனை டிப்பணிகள்? தெரியுமோ? ஏன் தெரியாது? நன்ருகத் தெரியும். ஏதேனும் ஒரு உரையிலாவது விளக்கமுண்டோ? கரதலாமலகத்திற்குக் கண்ணுடிதான் வேண்டுமோ?

பலபல கேள்விகளை விட்டிடுகிறேன். *இயம் கேவல லக்ஷ்மீச ச்லோகத்தைப் பற்றின கேள்வியை விட்டிடுகிறேன். *ஸ்வப்ராப்தே: ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ* என்கிற ச்லோகத்தைப் பற்றின கேள்வியையும் விட்டிடுகிறேன். *குணக்ஷத லிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:* என்கிற ச்லோகத்தைப்பற்றின கேள்வியையும் விட்டிடுகிறேன். கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் *நிஜ கர்மாதி பக்த்யந்த ச்லோகத்தில் ''உபாயதாம் பரித்யஜ்ய'' என்றவிடத்திலுள்ள ஸ்வாமி ஸூக்திகளைப் பற்றின கேள்விகளையும் விட்டிடுகிறேன். எம்பெருமானுடைய வ்யாப்தியைப் பற்றின விமர்சத்தில் வஸ்துதோறும் பரிஸமாப்யவர்த்திதவம் என்னும் விஷயத்தில் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் *க்ருத்ஸ்ந ப்ரஸக்திர் நிரவயவத்வ சப்தகோபோ வா* ச்ருதேஸ் து சப்த மூலத்வாத்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரங்களை யெடுத்துக் காட்டி நிர்ணயித்தருளினவர் தாமே ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அந்த ஸூத்ரங்களைத் தொடாமலே—ஸ்மரியாமலே-வேருக நிர்ணயம் செய்தருளினது எதனுலே என்கிற கேள்விகளையும் விட்டிடுகிறேன். எல்லாக் கேள்விகளையும் விட்டிடுகிறேன் என்றபின் 'அதை விட்டிடுகிறேன்' இதை விட்டிடுகிறேன் என்று பிரியச் சொல்லவேணுமோ? அக்கேள்விகளுக்கு உத்தரம் எனக்குச் சொல்லவேண்டா. *உபாவப்யச்ருதக்ரந்தௌ உபாவபி ஜடாத்மகௌ, அஹோ மோஹஸ்ய மாஹாத்ம்யம் தத்ரைகச் சிஷ்யதாம் கத:* என்னநிற்கும் சிஷ்யர் தெளியச் சொன்னுல் போதும். இதற்கு மேல் தேவரீர் ஒன்று ஸாதிக்கக்கூடும். ''எல்லாக் கேள்விகளையும் விட்டருளினது போல கீழே ப்ரஸ்தாவித்த ந்யாஸ தசக ச்லோகக் கேள்வியையும் ரஹஸ்யத்ரயஸார ஸூக்திக் கேள்வியையுங் கூட விட்டிடலாகாதோ'' வென்று. ஓம் ஓம். ஆம் ஆம். அப்படியே விட்டிட்டேன். சில சிறுபயல்களை ஏவி நிந்தைக் கந்தைகளை வெளியிடுவித்துக் கொண்டே காலங்கழிப்பீராக!

# அஸூயாபிண்டத்தின் ஆகாசதாண்டவம்

ஸத்யஸங்கல்ப பிருதபூஷிதரான ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் ஸ்ரீபெரும்பூதூரில் நடத்தியருளின மஹாக்ரதுவைப் பற்றிப் பொய்யானபலவிஷயங்களை நிரப்பி எழுதப்பட்டுள்ள ஆகாசதாண்டவக் காகிதத்தை ஒவ்வொருவரும் கிழித்துக் குப்பையில் எறிந்துவருவதாக நமக்குத் தெரிவித்துவருகிறார்கள். அக்கந்தைக்காகிதம் உலகமெங்கும் ப்ரசாரமடைவதற்காக போஸ்டேஜ் மட்டும் நூறுரூபாய்க்கு மேல் செலவு செய்திருக்கிறார்கள். நமது பரவாதிசிரோபூஷாவினாலும் மதுராந்தகமித்ரமஸ்தகபூஷாவினாலும் தமக்கு நேர்ந்த பங்கம் இக்கந்தையினால் மறைந்து போய்விடுமென்று நினைக்கிறார்பாவம் மதுராந்தகர்! ஸ்ரீஜீயர்ஸ்வாமி தற்காலம் பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கிறார் இன்னும் பலமாதங்கள் அங்கே எழுந்தருளியிருக்கத்திருவுள்ளம் பற்றியிருக்கிறார். ஸ்ரீபெரும்பூதூர் மஹாக்ரதுவைப்பற்றி இங்குநாம்தெரிவிக்கும் பலதத்துவங்களை ஸ்ரீஜீயர்ஸ்வாமி ஸன்னிதியிலே சென்று வாசித்துக்காட்டி 'இப்படி அண்ணங்கராசாரியர் வெளியிட்டிருப்பது வாஸ்தவம்தானா?' என்றுவினவி ஸ்ரீஜீயர்ஸ்வாமி ஸாதிக்கும் பதிலைப் பெற்றுக்கொள்வது.

# ஸ்ரீபெரும்பூதூர் நிகழ்ச்சியின் தத்துவங்கள்

சென்ற பங்குனி மாதமுடிவில் ஸ்ரீஜீயர்ஸ்வாமி டில்லிமாநகரில் நிகழ்த்திய மஹாக்ரதுவும் வித்வத்ஸம்மேளனமும் அதிமாநுஷம்! அதிதைவம் என்னும்படியிருந்தது. அந்த ஸந்தர்ப்பத்தில் ஜீயர்ஸ்வாமி ஸன்னிதியில் நான் விஜ்ஞாபித்ததாவது, 'இத்தகைய விசேஷங்களில் ஏகதேசமாவது ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் ஒருவிசையாவது நடந்தேறினால் நன்றாயிருக்கும்' என்று. அப்போது ஸ்ரீ ஸ்வாமி புன்முறுவல் பூத்துநின்றாரத்தனை. எனது வேண்டுகோளைத் திருவுள்ளம் பற்றினார் என்றும், அடுத்த வருஷத்திலோ அதற்கடுத்த வருஷத்திலோ இதை நடத்தியருள்வர் என்றும் எண்ணி மகிழ்ந்தேன். இது சென்ற சித்திரை மாதப்பிறப்பன்று நடந்தது. பிறகு ஆனிமாத முடிவில் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி திருமலை திருப்பதியிலிருந்து (முன்னறிவிப்பொன்றுமில்லாமல்) ஸ்ரீகாஞ்சியில் அடியேன் குடீரத்திற்கு ஸஹஸா எழுந்தருளினார். அன்று நான் நேத்ர சிகித்ஸா பர்யாலோசனைக்காக சென்னைநகர் சென்றிருந்ததை அறிந்த ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி அங்கு நான் தங்கின இடத்தை விசாரித்தறிந்துகொண்டு அங்கேற எழுந்தருளி "டில்லியில் தேவரீர் ப்ரஸ்தாவித்தபடி ஸ்ரீபெரும்பூதூரில் க்ரது விசேஷம் நடத்த நிச்சயித்தாயிற்று, ஆவன செய்யவேணுமென்று ப்ரார்த்திக்க வந்திருக்கிறேன்" என்று ஸாதித்து அந்த க்ரதுவின் ஆரம்ப அவஸாந தினங்களையும் ஸாதித்தருளினார். "இந்த விசேஷங்கள் ஸன்னிதியிலேயே நடக்கிறதா?" என்று கேட்டேன். "ஸன்னிதியிலேயே நடத்தவேணுமென்றுதான் உத்தேசம். ஆனால் அதற்குச் சில இடையூறுகள் இருக்கும்போல் தோன்றுகிறது" என்று தொடங்கிச் சில வார்த்தைகள் ஸாதித்தார். "இந்த விசேஷத்தில் உபயகலையாரும்

அந்வயிப்பதாக இருந்தால் அது ஸன்னிதியில் ஸாத்யமன்று'' என்று தேவஸ்தானதிகாரிகள் தீவிரமாகச் சொல்லுவதாகவும் ஸாதித்தார். ''அப்படியானல் தேவஸ்தாந ஸம்பந்தமில்லாத வேரிடத்தில் நடத்துவோம்'' என்று விஜ்ஞாபித்தேன். பிறகு ஜீயர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரிலேயே வாஸமாக இருந்துவந்தார். நான் அடிக்கடி அங்கே சென்று ஆலோசனைகள் செய்துவந்தேன். முடிவாக ''உபயகலையாரையும் அந்வயிக்கச்செய்துதான் நடத்தவேணும். அதற்கு தேவஸ்தானம் இடங்கொடாவிட்டால் தகுந்த வேறேரிடத்தில் நடத்தப் பார்க்கவேணும்—'' என்று சொல்லி நான் ஊர் வந்துவிட்டேன். பிறகு மூன்றுநாள் கழித்து ஜீயர்ஸ்வாமியின் ஸந்தேசம் எனக்குக் கிடைத்தது. தேவஸ்தான ஸம்பந்தமாக நடத்த இயலாமையால் புஷ்கரிணியின் மேலண்டை வடைடையில் விசாலமாக விருக்கிற ஒரு மைதானத்தில் பந்தல்போட்டு நடத்துவதாக நிச்சயித்திருக்கிறது; நேரில்வந்து கடாக்ஷிக்க வேணும்'' என்று. உடனே நான் ஸ்ரீபெரும்பூதூர் சென்று அந்த புஷ்கரிணிக் கரை ஸந்நிவேசத்தைக் கண்ணுற்றேன். இரண்டு மூன்று நாளில் ஐந்நூறு ரூபாய் செலவில் செப்பனிடு வேலைகள் நடந்திருக்கின்றன; நடந்துகொண்டிருக்கின்றன. எம்பெருமானாருடைய திருவவதார ஸ்தலத்தில் ஸ்வாமி ஸன்னிதியிலன்றிக்கே இப்படி வேறேரிடத்தில் நடத்துவதில் மனக்குறை மிகமிகத் தோன்றிற்று. இது அடியேனுக்கு மட்டுமன்று, ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிக்கும் மற்றும் பல மஹான்களுக்கும்.

அப்போது நான் ஸ்ரீ ஸ்வாமி தேவஸ்தான ரிலிஜியஸ் தர்மகர்த்தாவாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. யதிராஜ ஜீயர் மடாதிபதி. ஸ்ரீமத் பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஸன்னிதிக்கு விடைகொண்டு சில விஷயங்கள் விஜ்ஞாபித்ததன்மேல் ,'தனியிடத்தில் நடப்பது வேண்டா; தேவஸ்தான ஸம்பந்தமாகவே நடக்கட்டும். பெருமாளும் ஸ்வாமியும் நூற்றுக்கால் மண்டபத்தில் ஐந்துநாளும் எழுந்தருளியிருந்து அவர்களின் முன்னிலையிலேயே ஹோமகுண்டங்களும் கோஷ்டிகளும் நடைபெறும்படி ஏற்பாடு செய்துவிடுகிறேன்'' என்று விசாலமான திருவுள்ளத்தைத் தெரிவித்தார். அத்தோடு கூட "இதில் இதர கலையாருடைய ஸம்பந்தம் எவ்விதமாகவும் இருக்கக்கூடாது'' என்று வற்புறுத்தி யருளிச்செய்தார். ''கூரத்தாழ்வான் ஸன்னிதி வாசலில் அவர்கள் சிலர் தனியாக வேதபாராயணம் செய்துவரலாகாதோ?'' என்றேன். ''அது தேவஸ்தான ஸம்பந்தமற்ற இடமா என்ன? அதுவும் தேவஸ்த்தான ஸ்த்தலம்தானே ? வீணை கலஹங்கள் ஏற்படுவதற்கு இடமளிக்கலாகாது. இவ்விஷயத்தை நான் ஒருவனுக முடிவு செய்துவிடமுடியுமா? ஊரார்களையும் அநுஸரிக்கவேண்டியிருக்கிற தல்லவா?'' இத்யாதிகள் ஸாதித்தார். அப்போது அடியேன் அந்த ஸ்வாமி திருவுள்ளத்தை ஏற்றுக்கொண்டு ''ஸ்வாமி திருவுள்ளம் போலவே நடக்கும். இப்போதைய தீர்மானத்தையே முடிவாகக்கொண்டு மேற்காரியங்கள் ஆரம்பிக்க வேண்டியது'' என்று விஜ்ஞாபித்தேன். பிறகு ஸ்ரீமன் நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி ஸன்னிதிக்கு விடைகொண்டு அடியேன் விஜ்ஞாபித்ததாவது ''இதர கலையாருக்கு தேவஸ்த்தானத்தில் எவ்வித ஸம்பந்தமும் கூடாதென்று மடாதிபதி ஜீயர் ஸ்வாமி ஸாதிப்பது மிகவும் யுக்தமானதே. பழைய சரித்திரங்களை ஆராயும்போது அது மிகமிக யுக்தமானதே என்று தான் கொள்ளவேண்டும். இனி புஷ்கரிணிக் கரையில் நடத்தும் ஆலோசனை வேண்டியதில்லை. ஆனல் இதர கலையாருடைய ஸம்பந்

தத்தை ஸர்வாத்மநா விலக்குவதில் அடியேனுக்கு இஷ்டமில்லை. குளக்கரையிலும் மாடவீதியிலும் அவர்களுக்கென்று இரண்டிடங்கள் இருக்கின்றனவே, அவற்றி லிருந்துகொண்டு அவர்கள் எதையோ பாராயணம் செய்துவரட்டும். அவர்களுக் கும் ஆஹ்வான பத்ரிகைகள் அனுப்பவேண்டியதே'' என்று விஜ்ஞாபித்தேன். அப்போது ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி புன்முறுவலோடு ஒரு விஷயம் கேட்டார். ''இதர கலை யார்களையும் இங்கு அவச்யம் அழைக்கவேணுமென்று தேவரீர் நிர்ப்பந்தமாக ஸாதிப்பதற்கு என்ன காரணம்?'' என்று. அப்போது நான்

> ''பத்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாக தேவரீர் நாற்றிசைகளிலும் அதி மாநுஷமாக நடத்தியருகிற க்ரது விசேஷங்களும் ஆங்காங்கு ப்ரதிஷ் டாபநம் செய்துவருகிற க்ரது ஸ்தம்பங்களும் நமது நாட்டில் மடாதிபதிகளென்று விளங்குகிறவர்களில் ஒருவருக்கும் நெஞ்சால் நினைக்கவும் ஸாத்யமான தன்று. மதாந்தரஸ்த்தரான ஒரு ஸந்யாஸி இவ்வளவு அதிமாநுஷ க்ருத்யங்களை நடத்தினல் நான் அத்திசையை யும் உற்று நோக்க மாட்டேன்; ஸஹித்திருக்க மாட்டேன். தேவரீ ருடைய ப்ரபாவம் அப்ரமேய மாதலால் எல்லா மதஸ்த்தர்களும் உவந்து கலந்து ஆனந்தமாக அநுபவித்து வருகிறுர்கள். இதில் இதர கலையார்கள் ஸம்பந்தப் படாமலிருப்பானேன்? யோக்யதை பெற்ற எல்லாரையும் அழைப்போம். வருகிறவர்கள் வரட்டும். வந்து ஆனந்திப்பவர்கள் ஆனந்திக்கட்டும். வயிற்றெரிச்சல் படுகிறவர்கள் தாராளமாகப் படட்டும். இவ் வாச்சர்யச் செயல்களை ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தவர்கள் யாவரும் காணவேணுமென்பது அடியேனுடைய விருப்பம்.''

என்று விரிவாக விஜ்ஞாபித்தேன், ஜீயர் ஸ்வாமியும் முறுவலோடு கேட்டருளி 'அப்படியே செய்வோம்' என்று ஸாதிக்கக் கேட்டு ஊர் திரும்பிவிட்டேன்.

மறுநாள் 200 ஆஹ்வாந பத்ரிகைகளையும் கவர்களையும் ஒரு நபர் மூலமாக அடியேனிடம் அனுப்பி ஸ்ரீஜீயர் ஸ்வாமி ஸாதித்திருந்த ஸ்ரீமுகமாவது. ''ஆஹ்வாந பத்ரிகைகளைக் கொடுத்தனுப்பியிருக்கிறேன். தேவரீர் திருவுள்ளம் போல் காஞ்சி யிலும் காஞ்சீப்ராந்தஸ்த்த அக்ரஹாரங்களிலுமுள்ள யோக்யர்களுக்கு எனக்கு ப்ரதிநிதியாக தேவரீரே ஆஹ்வாநபத்ரிகைகளை அனுப்பவேண்டியது. ஆஹூதர் களின் விலாஸங்களைப் பிறகு தெரிவிக்கவேண்டியது'' என்று. உடனே ஜீயர் ஸ்வா மிக்கு நான் எழுதியனுப்பின பதிலாவது, ''ஸ்ரீஸ்வாமியின் ஸ்ரீமுகத்தை ஸேவித் துப் பரம ஸந்தோஷ மடைகிறேன். அப்படியே செய்கிறேன். ஸ்ரீரங்கத்திலுள்ள ஸ்வாமிகளுக்கு மட்டும் ஸ்ரீ உ. வே. புத்தூர் வக்கீல் ஸ்வாமி மூலமாகவும் ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் ஸ்வாமி மூலமாகவும் ஆஹ்வாந பத்ரிகைகள் சேர்ப்பிக்க வேண்டி யது. அவ்விடத்திலுள்ளாருடைய விலாஸங்களை அறியேன். மற்றபடி தஞ்சாவூர் ஜில்லா, கடலூர் ஜில்லா, செங்கற்பட்டு ஜில்லா, சித்தூர் ஜில்லா, ஆந்த்ர ப்ரதே சம் இவ்விடங்களிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கெல்லாம் நாளைக்கே ஆஹ்வாந பத்ரிகைகளை போஸ்டு செய்து ஸ்வாமிக்குத் தெரிவித்து விடுகிறேன்'' என்று. அப் படியே செய்து விட்டேன்.

ஆக இவ்வளவு ஸமாசாரமும் அந்யூந அநதிரிக்தமாக எழுதப்பட்டது. மீண்டும் எழுதுகிறேன். இதர கலையாருடைய ஆஹ்வாநத்தை வற்புறுத்தி நடத்தி வைத்தவன் யானே. இவ்விஷயத்தின் முடிவையும் கேளீர். 19–8–73ல் மாலை ஸம்பாவனை நடக்கப்போகிறது. முதனாளிரவு 10 மணிக்குமேல், ஜீயர்ஸ்வாமி தமக்கு வலக்கையாகவிருந்து ஸ்ரீகார்யம் செய்து வந்த ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியர், B.A. என்பவரையும் மற்றொருவரையும் நான் தங்கியிருக்குமிடத்திற்கு அனுப்பி அவரவர்களுக்கு ஸமர்ப்பிக்க வேண்டிய ஸம்பாவனைகளின் லிஸ்டை தயாரித்துக்கொண்டு வரும்படி நியமித்தருளினர். மூன்று மணி காலம் அவர்களை வைத்துக்கொண்டு ஸம்பாவனை லிஸ்ட் தயாரித்துக் கொடுத்ததும் யானே. ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி பதரிகாச்ரமத்திற்கு எழுந்தருளிவிடவில்லை. த்வீபாந்தரத்திற்கும் எழுந்தருளிவிடவில்லை. ஸ்ரீரங்கத்திலேயே ஸேவை ஸாதித்து வருகிறார். இவ்வளவு ஸமாசாரங்களும் உண்மையா, உண்மைக்கு மாறுனதா என்று ஸ்ரீஸ்வாமியையே நேரில் கேட்டுணரலாம். 'உணரலாம்' என்பது தகுதியன்று. அவச்யம் உணரவேண்டும். உண்மைக்கு மாருக ஓரக்ஷரமும் இங்கு எழுதப்படவில்லை. இவ்விசேஷத்திற்காக ஸ்ரீபெரும்பூதூருக்கு வந்த வடகலை ஸ்வாமிகளைப் பெரும்பாலும் ஆஹ்வாநித்தவன் யானே. ஆஹ்வானிக்க வேண்டுமென்று ஜீயர் ஸ்வாமியை வற்புறுத்தினவனும் நானே.

ப்ரஸங்காத் வேறு சில விஷயங்களும் இங்கு எழுதுகிறேன். சென்ற மாசி மாதத்தில் கிஷ்கிந்தையில் ஒரு பெரிய யாகம் பத்துநாள் நடந்தது. அதை நடத்தி வைத்தவர் காசி ஸ்ரீராமாநுஜ மடாதிபதியான ஒரு ஸந்யாஸி. அவர் நிர்ப்பந்தமாக என்னை ஆஹ்வானித்திருந்தார். காஞ்சியிலிருந்து இருபது ஸ்வாமிகளாவது அவச்யம் வரவேண்டுமென்றும் தெரிவித்திருந்தார். அப்போது எட்டு தென்கலை ஸ்வாமிகளையும் பத்து வடகலை ஸ்வாமிகளையும் அழைத்துச் சென்றிருந்தேன். ஸம்பாவனையும் ஸர்வஸமமாகச் செய்துவைத்தேன். ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதி கௌரவ தர்மகர்த்தாக்களில் ஒருவரான ஸ்ரீ உ.வே. பெரு. ஸுதர்சன தாதாசாரியரையும் அவரோடுள்ளவர்களையும் கேட்டுப்பார்க்கவேணும். அவ்விடமிருந்து இரண்டுநாள் முன்னதாகவே நான் ஊர் திரும்ப நேர்ந்தது. கிஷ்கிந்தையில் விசேஷம்முடிந்து அவர்கள் ஊருக்குத் திரும்பிவந்தபிறகு 'ஸத்காரமெல்லாம் ஸக்ரமமாக நடந்ததா?' என்று கேட்டபோது ''நாங்கள் எண்ணினபடிக்குப் பதின் மடங்கு மேலாக நடந்தது'' என்று பரம ஸந்தோஷத்துடன் சொன்னர்கள், இங்ஙனே பலபல உதாஹரிக்க வேண்டியதுண்டு.

ஸ்ரீபெரும்பூதூர் விஷயத்தில் இந்த ஆசாதாண்டவர் எழுதியுள்ளார். ''கோயில் கைங்கர்யங்கள் ஒன்றிலும் வடகலையாரைக் கலக்கவிடாததொன்றே இவரால் செய்யமுடிந்தது'' என்று. இதை மத்யஸ்த மஹான்கள் விமர்சிக்க வேண்டும். இவ்வினத்தவர்கள் அறுபது வருஷங்களுக்கு முன்னே ஸ்ரீபெரும்பூதூரில் செய்துவந்த அதர்க்கணச் செயல்களினல் நீதிமன்றங்களில் க்ரிமினல் கோர்ட்டுகளிலும் ஸிவில் கோர்ட்டுகளிலும் நடந்த வ்யவஹாரங்கள் ஒன்றிரண்டல்ல. பலபல. கடைசியாக முடிந்த செய்தியைக கேண்மின். சென்னை ஹைகோர்ட்டில் வ்யவஹாரம் நடந்து கொண்டிருக்கிறது. அக்காலத்தில் ஸ்ரீமான் V. க்ருஷ்ணசாமி

ஐயர் என்பவர் அட்வகேட். மஹாமேதாவியானவர். அவர் வடகலையாருக்கு வக்கீலாயிருந்து இந்த ஸ்ரீ பெரும்பூதூர் வ்யவஹாரத்தை நடத்தி வந்தார். திடீரென்று அவர் ஜட்ஜ் பதவியை ஏற்ருர். சில மாதங்களில் இந்த ஸ்ரீபெரும்பூதூர் வ்யவஹாரம் அவர் கோர்ட்டிலேயே பரிசீலனைக்கு வந்தது. அவர் ஏற்கெனவே பல வருஷங்கள் வடகலையாருக்கு வக்கீலாயிருந்துவந்தபடியால் அவருடைய கோர்ட்டில் நமக்கு ந்யாயம் கிடைக்காதென்று நினைத்த தென்கலையார்கள் அந்த வ்யவஹாரத்தை வேறொரு ஜட்ஜின் கோர்ட்டில் கொண்டு போக நினைத்தார்கள். தற்காலம் மஹா யசஸ்வியாய் விளங்கிக்கொண்டிருக்கிற ஸ்ரீமதுபயவே. V. N. வெங்கடவரதாசாரிய ஸ்வாமியின் ஸாக்ஷாத் மாமனரான ஸ்ரீ உ. வே. தி. ரங்காசார்ய ஸ்வாமி அப்போது தென்கலையாருக்கு வக்கீலாயிருந்து வந்தார். அப்போது ஸ்ரீபெரும்பூதூர் தென்கலையார்கள் அவரிடம் சென்று இதை எப்படியாவது வேறுபெஞ்சுக்கு மாற்றித்தரவேண்டுமென்று ப்ரார்த்தித்தார்கள். தகுந்த காரணமில்லாமல் மாற்ற முயல்வது பலிக்கமாட்டாதென்றும் அதில் தாம் தலையிடமுடியாதென்றும் அவர் சொல்லிவிட்டார். கடைசியாக அந்த க்ருஷ்ணசாமி ஐயர் பெஞ்சிலேயே விசாரணை ஆரம்பமாய்விட்டது. "நமக்குப் படுதோல்விதான்" என்று தென்கலையார்கள் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருந்தார்கள். (இந்த வ்யவஹாரத்தில் காஞ்சீபுரம் தாதாசார்ய குடும்பஸ்தர்களுக்கே ஸம்பந்தமிருந்ததே யல்லது மற்ற வடகலையார் ஒருவர்க்குமிருந்ததில்லை.) ஜட்ஜ் அவர்கள் தாதாசார்களுக்கு வக்கீலாயிருந்த போது ரிகார்டுகளையெல்லாம் நன்கு பரிசீலனை செய்தவராகையாலும் மஹா மேதாவி என்று ப்ரஸித்தி பெற்றிருந்ததனுலும் நிஷ்பக்ஷபாதராதலாலும் மனச்சாட்சிக்கும் உண்மைக்கும் மாருக ஒரெழுத்தும் எழுத விரும்பாமல் ஐந்து நிமிஷத்தில் வ்யவஹாரத்தை அலம்பிக் கவிழ்த்து விட்டார். அவருடைய ஜட்ஜ்மெண்டில் ஸாரமான வார்த்தை ஒன்றே கேண்மின். "தாதாசார்ய குடும்பஸ்தர்கள் தாங்கள் நெடுநாளாகக் கொண்டிருந்த மந்திரமான ஸ்ரீசைலேச தயாபாத்ர தனியனை விட்டு வேறொரு தனியனை என்றைக்கு ஏற்றுக் கொண்டார்களோ அன்றைக்கே இவர்களிடம் அஸ்ரீ புகுந்து விட்டது" என்று.

இதற்கு மூலமான ஆங்கில வாசகத்தை நாம் பலபுத்தகங்களில் வெளியிட்டிருக்கிறோம். அது நிற்க. அன்றுமுதலாகவே ஸ்ரீ பெரும்பூதூர் ஸன்னிதி ப்ரவேசத்தை இழந்துகிடந்த விவர்களுக்கு இப்போது புதிதாக என்ன பங்கம் விளைந்திட்டதோ? இந்த பங்கத்தை இப்போது மனிதர்களா செய்வித்தார்கள்? இது என்ன பேதைமை? ப்ரஸங்காத் மற்றொன்றும் இங்குத் தெரிவிக்கிறேன். (அதாவது ஸ்ரீரங்கவ்யவஹார விஷயம்.)

## ஸ்ரீரங்கத்தீர்ப்பு வரலாறுகள்

ஸ்ரீபெரும்பூதூரில் போலவே ஸ்ரீரங்கத்திலும் கலாவைஷம்ய வ்யவஹாரங்கள் பலபல நடந்து வந்தனவன்றோ? அக்காலத்தில் முடிவான தீர்ப்புகள் நம்மால் ஏழெட்டு வருஷங்களுக்கு முன்பு ஆங்கிலத்திலும், அதன்

தமிழ் மொழிபெயர்ப்பிலும், வெளியிடப்பட்டிருக்கின்றன. நமது ஸ்ரீராமாநுஜன் 237-238 ஸஞ்சிகையிலிருந்து சில வாக்கியங்களையே இங்கு அனுவதிக்கிறேன். “ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் ஈஸ்டு இண்டியா கம்பெனியார் மானேஜ்மெண்டில் இருந்தபோது கோவில் அதிகாரியான வேலு என்பவர், கலெக்டர் வாலஸ் துரைக்கு தென்கலை வடகலை தகராறுகளைப்பற்றி 15—8—1803ல் எழுதினர். (அதாவது)—

“இதுநாள்வரை ஏற்பட்ட மாமூல்படிதான் கோவில் காரியங்கள் நடக்க வேணுமென்று ஸமூகம் உத்தரவு. அந்த மாமூல்படியே தென்கலை வேதாந்தாசார் திருநக்ஷத்ர தினமும் தென்கலையார்கள் சடங்குகளை நடத்தியிருக்க, வடகலையார்கள் மாமூலுக்கு விரோதமாக ராமாநுஜதயாபாத்ரம் என்கிற மந்திரத்தைப் புதிதாகச் சொல்ல ஆரம்பித்தவுடன் தென்கலையார்கள் இது நூதனச் செயலென்று ஆக்ஷேபித்தும், அவர்களில் சில ஸன்யாஸிகள் இந்த அநீதிச்செயல் அவமானகரமென்று சொல்லி எழுந்து போயும்......வடகலையாரில் 3, 4 பேர்கள் துஷ்டர்கள் கம்பெனியார் ஆளுகைக்கே பயப்படாமல் நூதன காரியங்கள் செய்யத் துணிகிறபடியால் மாமூலுக்கு விரோதமாக நடப்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்று தண்டோரா போட வேண்டும்”—என்று.

மத்யஸ்தரென்று ரிகார்டுகளில் வழங்கப்படுகிற ஷை வேலு மறுபடி 13—9—1803ல் எழுதுகிறார்—சில வடகலையார்கள் தன்னிடம் மனுக் கொடுத்துக் கொண்டிருப்பதாகத் தெரிவிக்கிறார்—(அதாவது) “முன்காலம் முதல் இதுவரை தென்கலையாரே கோயிலில் எல்லாவிதமான பாத்யங்களையும் ஏகதேசமாக அனுபவித்து வந்திருக்கிறார்களே, தற்போதைய கம்பெனியார் ஆளுகையில் எங்களுக்கும் சில பாத்யங்களாவது நீங்கள் ஏற்படுத்திக் கொடுக்கக்கூடாதா? என்று கேட்கிறார்கள்” என்று. இதிலிருந்து தென்கலையாருக்குத்தான் கோவிலில் எல்லா பாத்யங்களும் ஏகதேசமாக வுண்டென்றும், வடகலையார்கள் நூதனமாகப் போராட வருகிறார்களென்றும் தேறுகிறது.

பிறகு 28—4—1808ல் ஜில்லா கோர்ட் ஜட்ஜ் லாதாம்துரை தீர்ப்பு:— “தென்கலையார்களே ஸ்ரீரங்கம் ஸப்தப்ராகாரத்துக்குள் ஸ்வாமிக்குச் செய்யப்படும் எல்லாச் சடங்குகளிலும் ஸர்வாதிகாரிகளென்று இக்கோவிலிலுள்ள எல்லாத் திருபண்களும் தென்கலையாயிருப்பதாலும் மற்ற காரணங்களாலும் தெளிவாயிருக்கிறதென்றும், தென்கலையாருக்கே கோயில் ஸப்தப்ராகாரம் ஏற்பட்டதென்றும், வடகலையார்களை அந்த ப்ராகாரங்களுக்குள் குடியிருக்க அனுமதிக்கப்பட்டதானது தென்கலையார்கள் சொல்படியே அவர்கள் வீட்டிலும் கோவிலிலும் அத்யாபக வேதபாராயண எல்லாச் சடங்குகளையும் நடத்த ஸம்மதித்ததின் பேரில்தான் என்பதும் வ்யக்தமாகிறது. அனேக ருஜுக்களால் கோவிலில் தென்கலையார்களின் ஆதிபத்யம் ஊர்ஜிதமாகிறது. வெகு நாளாக தென்கலையார்களே அநுபவித்து வந்த பாத்யங்களில் வடகலையார் எவ்விதத்திலாவது தலையிட்டுத் தடுத்தார்களானல் அவர்களை சரீர சிக்ஷை, ஸப்தப்ராகாரபஹிஷ்காரம், அல்லது சிறைக்கு உள்ளாக்கவேண்டும்.”

அப்பீல் கோர்ட்டு 14—12—1835.

"வடகலையார்கள் மிகவும் பிடிவாதத்துடன் சட்டத்தை மீறி தென்கலையார்களின் பாத்யத்தை நிராகரித்து வருகிறார்கள். அவர்களின் அபிப்ராயாம் என்னவென்றால், ஓயாமல் ஹிம்ஸித்துத் தொந்தரவு செய்துவந்தால் தென்கலையார்கள் பலஹீனர்களாய் தங்கள் பாத்யத்தையெல்லாம் விட்டுவிட்டு ஓடிவிட மாட்டார்களா என்பதுதான். தென்கலையார்கள் நிராக்ஷேபணையாக தங்கள் பாத்யங்களை அநுபவிக்கவேண்டிய ஸௌகர்யம் செய்து கொடுப்பதுடன் சட்டத்தை மீறி நடப்பவர்களுக்கு சரியான புத்தி கல்பிக்க வேண்டும்."

கலெக்டர் உத்தரவு 13—4—1820.

"கோவிலில் சாஸ்த்ர ஸந்தேஹம் ஏற்பட்டால் சாஸ்த்ரஜ்ஞர்களாய் தென்னுசார்ய ஸம்பிரதாயஸ்தர்களாயிருப்பவர்களையே கலந்துகொள்ளவேணும்."

1822ல் வடகலையாரில் சிலர் 1808ல் தோன்றிய [முன்னம் உதாஹரிக்கப்பட்டிருக்கிற] ஜில்லா ஜட்ஜ் தீர்ப்பை மீறி நடந்துகொண்டார்களென்கிற குற்றத்திற்காக அவர்களை ஆர்யபடாள் வாசலுக்குள் விடாமலிருக்க உத்தரவிட்டு நன்னடத்தை ஜாமீன் வாங்கி, பிறகு உள்ளே விட்டார்கள்.

1829ஞு முதல் பலதடவை ஸ்ரீமத் அஹோபிலம் ஜீயர் ஸ்ரீரங்கம் எழுந்தருளினபோது நிசான் சுருட்டி முதலான எடுபிடி ஸாமான்கள் தெருவிலே கொண்டு வரப்படுகையில் தடையுத்தரவு ஏற்பட்டிருக்கிறது. ஸ்வஸ்திவாசனம் மாத்திரம் தென்கலை ஸ்வாமிகளைக்கொண்டு செய்துகொள்ள அநுமதியளிக்கப்பட்டது.

1874ஞு பென்னிங்டன் ஜட்ஜிமெண்டு: கொடியாலம் ரங்கஸாமி ஐயங்கார் ஸ்ரீரங்க தேவஸ்தானத்தைச் சேர்ந்த தென்கலை வேதாந்தாசாரியருக்கு நூதனமாக வடகலை நாமமிட்டு விக்ரஹத்தை ஏள்ளப் பண்ணிவைத்த குற்றத்தின் பேரில் தோன்றிய இந்த ஜட்ஜ்மெண்டின் ஸாராம்சம்—

"வடகலையார்கள் துராகிருதமாய் 1808ஞு தீர்ப்பை நிராகரிக்கவே வழி தேடி வருகிறார்கள். இங்கே தென்கலையாருடைய பாத்தியம் நிஸ்ஸந்தேஹமாயும் புராதனமாயுமிருக்கிறது. 1863ஞு வரை கோவிலிலுள்ள எல்லாத் திருமண்களும் (அதாவது) மதிள்கள் சுவர்கள் பாத்ரங்கள் எடுபிடிசாமான்கள் பிம்பங்கள் ஆகிய எல்லாவற்றிலுமுள்ள எல்லா நாமங்களும் அப்போது லிஸ்டு எடுத்ததில் ஏகதேசமாய் தென்கலை நாமங்களேயென்று தெரியவருகிறது. தேசிகருக்கு இட்ட வடகலை நாமம் துராகிருதமாயும் சட்ட விரோதமாயும் வழக்க விரோதமாயும் தெரிகிறது. தென்கலையார் மனதை புண்படுத்தவேணுமென்கிற கெட்ட எண்ணங்கொண்டே தேசிகர் நாதமுனி விக்ரஹங்களை புதிதாக வடகலை நாமமிட்டு ஏள்ளப்பண்ண (கொடியாலம்) ரங்கஸாமி ஐயங்கார் ஏற்பாடு செய்தார். இந்த குற்றத்திற்கு ரூபாய் ஆயிரம் அபராதம். கட்டத்தவறினுல் மேீ தண்டனை."

(இதெல்லாம் 1968ல் நாம் அச்சிட்டது. ஸ்ரீமதுபயவே V.N. வெங்கடவரதாசாரியர் ஸ்வாமி, அட்வகேட் ரிகார்டுபடி உள்ளதென்று கையொப்பமிடப்பெற்றது.)

ஸ்ரீமதுராந்தக மஹாஸ்வாமின்! ஸ்ரீராமாநுஜனுக்கு 306வது ஸஞ்சிகை இது. முதல் ஸஞ்சிகை முதலாக ஒவ்வொரு ஸஞ்சிகையும் விடுபடாமல் தேவரீருக்கு அனுப்பப்பட்டு வருகிறது. எல்லாம் தேவரீரால் கோவிலாழ்வாரில் வைத்து ஆராதிக்கப்பட்டும் வருகின்றன. அடிக்கடி எடுத்து அநுபவிக்கப்பட்டும் அந்தேவாஸிகளுக்கு காட்டப்பட்டும் வருகின்றன. எவ்வளவென்று நாம் உதாஹரிப்பது? ஸஞ்சிகையில் இலக்கத்தைக் காட்டிவிட்டேன். அதை எடுத்துப் பூர்த்தியாகக் கடாக்ஷித்துக் கொள்க. ப்ரக்ருதம் ஸ்ரீபெரும்பூதூர் ப்ரஸ்தாவம் வந்தபடியாலும் அவ்விடத்தில் உங்களினத்தவர்களைக் கோவிலில் புகவிடாதபடி நான் செய்துவிட்டதாகவும் ஆகாசதாண்டவக்காரர் எழுதியிருந்தபடியால் இவ்வளவு விளக்கம் தரவேண்டியதாயிற்று. ஸாரமாக ஒன்று சொல்லி இவ்விஷயத்தைமுடிக்கிறேன்.

இராவணன் மாண்டுபோன பின்பு மந்தோதரி அங்கேவந்து சொன்னதொரு ச்லோகம் தெரியுமா உமக்கு? இதோ நினைவூட்டுகிறேன். "இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவனம் த்வயா, ஸ்மரத்பிரிவ தத்வைரம் அத்ய தைரேவ நிர்ஜித:" என்பதாம் அது. இந்த ச்லோகம் எவ்வளவு கம்பீரமானது தெரியுமா? "இராவணா! உன்னை இராமன் கொல்லவில்லை. உன்னை நீயே மாய்த்துக் கொண்டாய்" என்பது இதன் ஸாரமான கருத்து. இதில் "அத்ய தைரேவ நிர்ஜித:" என்பது ஜீவநாடியான வாக்கியம். இதே போல், ஸ்ரீபெரும்பூதூர் ஸந்நிதியில் உங்களுக்கு ப்ரவேசமில்லாதபடி செய்து கொண்டவர்கள் நீங்களேயொழிய, நானுமல்லேன், நமருமல்லர். இந்த ப்ரஸங்கங்களை மானிகள் எடுக்கமாட்டார்கள். "ஸத்புத்திஸ் ஸாது ஸேவீ' என்கிற ந்யாஸ விம்சதி ச்லோகத்தில் ஆறுவது விசேஷண மொன்றுண்டே அதற்கு இலக்கானவர்களே இத்தகைய அசட்டு ப்ரஸங்கங்களைச் செய்வர்கள். நீங்கள் இவ்வளவோடு நிற்கப்போகிறதில்லை. எனக்குச் சோதிடத்திலும் ஞானமுண்டாதலால் இனி விளையப்போவதையும் இப்போதே எழுதுகிறேன். ப்ராப்தமான சாஸ்த்ரார்த்த விசாரங்களில் மறுவாய் திறக்கவொண்ணாதபடி விஷயங்களை எழுதி வீறுபெறுவதற்கு பாக்கியமும் சரக்கும் உங்களுக்கில்லாமையாலே மீண்டும் மீண்டும் நிந்தைக் கந்தைகளையே வெளியிட்டுக் கொண்டிருக்கவே போகிறீர்கள். "தண்ணீர்ப் பாம்பானாலும்—குட்டித் தேளானாலும்" என்று கீழே நாம் காட்டிய பழமொழிகள் என்றைக்கும் பழுதுபடாது.

மேகஸந்தேச காவ்யத்தில் மேகத்தைத் தூதுவிடும் யக்ஷனுடைய பேச்சாக அமைக்கப்பட்ட "கந்தவ்யா தே வஸதி: அலகா நாம யக்ஷேச்வராணாம் பாஹ்யோத்யாநஸ்தித ஹர சிரச் சந்த்ரிகா தௌத ஹர்ம்யா" என்றுள்ள ச்லோகத்தின் சுவைப் பொருளை நாம் உபந்யஸிப்பது எங்ஙனேயென்னில்,—அப்பா மேகமே! நீ என் கார்யத்திற்காக தூது போக வேண்டாம். உன் கார்யத்திற்காகவே அளகாபுரிக்குச் செல்ல வேண்டும் நீ. [தே கந்தவ்யா] உன் கண் படைத்த பயன் பெறவேண்டுமப்பா. உன்பேருகச் செல்லவேண்டும். அவ்விடத்து விசேஷம் வேறெங்குமில்லை. [பாஹ்யோத்யாந இத்யாதி] இந் நிலவுலகத்திலுள்ளார் சந்திரிகையைப் பார்ப்பது போலன்று அவ்விடத்திலுள்ளார் அதைப் பார்ப்பது."—இவ்வளவு சுருக்கம் போதுமிங்கு. இதே போல், இவர் மீது நான்

எறிந்திருக்கிற அம்புகளைப் பரிஹரித்துக் கொள்ள வேண்டியது என்னுடைய வேண்டுகோளுக்காகவன்று. இவருக்குக் கர்த்தவ்யம். இவர் ஸம்ப்ரதாய ரக்ஷை செய்வது உண்மையானல், என்னுடைய கேள்விகளுக்கு விடை கூறியாக வேண்டியது தலைவிதியாகும். ஆனல் இவர் தலையில் அதை எழுதவில்லை. யார்? எல்லார் தலையிலும் எழுதுகிற விதி.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திலுள்ள "மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்த த்ருஷ்டாந்த வர்ணனம், அஹங்காராந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்" என்கிற காரிகை எந்த ஆசார்யருடைய எந்த ஸ்ரீ ஸூக்தியை நோக்கியது என்கிற நமது ஒரு கேள்விக்கு மட்டும் இவர் விடையிறுத்துவிட்டால் உய்யலாமே! பல வாண்டுகட்கு முன்னமே நம்மாழ்வார் *பொலிக பொலிகவில் "உய்யும் வகையில்லை தொண்டீர்!" என்றருளிச் செய்து வைத்தது பழுதுபடுமோ?

## சங்காபரிஹார ப்ரபாவமும் உதயோபஸ்த்தப் பெருமையும்

வித்வான்களிருவர் நித்யமும் இவருடைய ஜாகைக்கு வந்து சங்காபரிஹாரங்கள் செய்துவிட்டுப் போவது வழக்கமென்று எழுதுகிருர். இது வாஸ்தவமே. இவர்க்கு பாஹ்ய பூமியிலே இடமளித்திருந்தபடியாலே சங்காபரிஹாரங்களுக்கு ஸௌகரியமாக இடமுள்ளதென்று நாங்களும் அங்கேதான் சென்று சங்காபரிஹாரங்கள் செய்துகொள்வது வழக்கமென்று ஸ்ரீமதுபயவே கோயில் சதாபிஷேகம் ஸ்வாமியும் பிள்ளைலோகம் ஸ்வாமியும் அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கிறேன். காலை வேளைகளில் யாராவது இவருடைய ஜாகைக்கு வந்து எஜமானர் இருக்கிருரோ என்று மனைவியைக் கேட்டால் "எங்காத்துக்காரர் உதயோபஸ்தம்; அதற்காக ஏறிக்கப் போயிருக்கிருர்" என்று மனைவி சொல்லுவது வழக்கமாம். அந்தப் பெருமையை ஏனே எழுத விட்டிட்டார்கள். ஸம்பாவனையில் ஸாம்யம் வைஷம்யம் என்று ஏதோ எழுதுகிருர்.

"ச்வ யுவ மகோநாம் அதத்திதே" என்று பாணிநி ஸூத்ரமொன்று; அதைக் கண்டு ச்வா சொல்லிக் கொள்ளுமாம்—மகவாவுக்கு முன்னே எனக்குத்தான் பாணிநி மஹர்ஷி அக்ரதாம்பூலம் கொடுத்தாரென்று. அப்படிப் பெருமையடித்துக் கொள்வதற்கும் விஷயமில்லையே. அந்தோ! ஏதுக்கு வீணை நப்பாசைகள்! மேன்மேலும் பரிபவங்கள் வளரவேயன்ரே இத்தகைய ப்ரஸங்கங்கள்! ஒட்டப்பட்டிருந்த கவருக்குள் என்ன வைக்கப்பட்டிருந்ததென்பதை "யத்ர தாதா க்ரஹீதா ச ஸ்வயம் குசிகநந்தந:" என்னப் பெற்றிருந்த நானன்ரே அறிவேன்!

வெட்கமற்று விஷயமொன்று எழுதுகிருர்;—ஜீயர் ஸ்வாமியிடமிருந்து தனக்கு ஆஹ்வானம் கிடைத்தபோது கலா பேத நிபந்தனமாக ஏதேனும் வைஷம்யம் ஏற்படுமா? ஸாம்யமே யிருக்குமா? என்று தான் எழுதிக் கேட்டதாகவும் அப்படிக்கு வைஷம்யம் ஏற்படாதபடிக்கு நான் பார்த்துக் கொள்கிறேன் என்று ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி பதில் தெரிவித்ததாகவும் எழுதுகிருர்,

# வைணவ உலகமெல்லாம் இதைக் கவனிக்கவேண்டும்

ஸ்ரீமத் பரம ஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் ஸ்ரீபெரும்பூதூரில் நடத்தியருளின மஹாக்ரது விசேஷம் 19:8:73-ல் முடிவுபெற்றது. அந்த விசேஷங்களையெல்லாம் அடியேன் 30:8:73-ல் ஸ்ரீராமாநுஜன் மூலமாக வெளியிட்டிருக்கிறேன். அதாவது, அந்த விசேஷம் முடிந்த ஒரு வாரத்திற்குள் வெளியிட்டிருக்கிறேன் என்றபடி. மதுராந்தக ஸ்வாமியோடு நடந்த ஸம்பாஷணையும் அப்போதே வெளியிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீராமாநுஜன் "300" இலக்கமுள்ள ஸஞ்சிகையில் இதெல்லாம் காணலாம். 150 நாட்களுக்குப் பிறகு இப்போது ஒரு ஆகாச தாண்டவம் வெளிவந்திருக்கிறது. 5 மாதங்கள் கழிந்த பிறகு இப்போது இதற்கு என்ன ப்ரஸக்தி என்று ஒவ்வொரு விவேகியும் ஆராய வேண்டும். மதுராந்தக ஸ்வாமியோடு ஸம்பாஷணை என்று நாம் வெளியிட்டது இவர்களுக்கு மறுக்கத் தக்கதாகத் தோன்றினல் ஆவணி மாதத்திலேயே அல்லது புரட்டாசி ஐப்பசியிலேயே அது செய்யப்பட்டிருக்க வேணும். வைணவவுலகம் முழுதும்பரவிய அந்த ஸம்பாஷணையினல் வெட்கமடைந்த மதுராந்தக ஸ்வாமி தம் பெயரால் எதுவும் வெளியிட்டுக் கொள்ள முடியாமல் சில பாமரர்களைக் கிளப்பி விட்டு அஸப்யமான முறையில் சேஷ்டை செய்து வருகிறார். இவர் ஸ்ரீபெரும்பூதூருக்கு வந்தது ஸ்ரீஜீயர் ஸ்வாமியினுடைய ஆதரம் மிக்க அழைப்பினல் என்பதை நானே வெளியிட்டிருக்கிறேன். மேலே குறித்த "300" இலக்கமுள்ள ஸ்ரீராமாநுஜனில் ஸம்பாஷணையின் தொடக்கத்தில் லோகாபிராம ஸல்லாபத்தில் என்னுடைய வினவும் அவருடைய விடையும் நன்கு வெளிவந்திருக்கிறது. அதாவது

"ஸ்வாமிந்! இவ்விடத்தில் தேவரீருடைய ஸேவை கிடைக்காதென்று எண்ணியிருந்தேன். க்ருபையுடன் ஸேவை ஸாதித்தது பரமபாக்யம். "அநாஹூதோத்வரம் கச்சேத்" என்கிறமுறையில் எழுந்தருளின படியோ, ஆஹ்வானமுண்டோ?" என்று நான் கேட்டதற்கு மதுராந்தகம் ஸ்வாமி கூறின விடை:

"அநாஹூதனகவே வருவதாகத் தானிருந்தேன். ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியின் பரமக்ருபாகனமான ஆஹ்வானமும் கிடைத்தது. இங்கு நிதயம் ஒரு மணிகாலம் வெளி வீதிகளில் ஸ்ரீபாஷ்யம் சொல்லும்படியாக ஜீயர் ஸ்வாமி நியமித்து வரவழைத்திருக்கிறார். அதனல் வந்திருக்கிறேன். கீழ் நாலு நாள்களில் ஸ்ரீபாஷ்யோபந்யாஸம் என்று பெயரிட்டு ஏதோ சொல்லி வருகிறேன்." என்று இவர் கூறினவிடையை வெளியிட்டிருப்பதை உலகம் கண்டிருக்கிறது. இன்னமும் காண விரும்புமவர்கள் எடுத்துக் காணலாம்.

இப்போதைய ஆகாசதாண்டவக்காரர் "ஜீயர்ஸ்வாமி நியமித்தார், நியமித்தருளினர்" என்றெழுதவேண்டுமிடங்களில் "ப்ரார்த்தித்தார் ப்ரார்த்தித்தார்" என்று எழுதியிருப்பது அஸப்யமான வார்த்தையாகும். "அழகியசிங்கர் ப்ரார்த்தித்தார் ஆண்டவன் ப்ரார்த்தித்தார்" என்றிவர்கள் எழுதுவர்களா? எழுதியிருந்தால் என்ன பாடுபட்டிருப்பர்கள் தெரியுமோ? ஒரு கல்யாணம் நடக்கவேண்டுமிடத்து அரிசி, பருப்பு, சர்க்கரை, வெல்லம் முதலானவை மட்டும் வாங்கப்படுவதில்லை, சூர்ப்பம், ஸம்மார்ஜனி, காஷ்டம், லோஷ்டம், முதலானவையே முந்துற முன்னம் வாங்கப்படுவதுவழக்கம் என்பது இவர்களுக்குத்தெரியாதா? தவிர, விவாஹத்திற்கு

மங்கலவாடுவையே முன்னமழைப்பது வழக்கமல்லவா? மங்கலவாடுவை ப்ரார்த்தித்தார்—சாகலவாடுவைப்ரார்த்தித்தார் என்று யாரேனும் எழுதுவதுண்டா? சூர்ப்ப ஸம்மார்ஜனிகளை ஏள்ளப்பண்ணினர் என்றுவது எழுதுவதுண்டோ? விநாசகாலே விபரீத புத்தி:. இதற்கு மேலுள்ள வாக்கியங்களையுங் கேளீர்! ஸ்ரீஜீயர்ஸ்வாமியை இவர்கள் கேட்டார்களாம்—அந்த உற்சவத்தில் வடகலையாருக்கும் ஸமமான பங்கு உண்டா? அல்லது அதில் ஏதும் கலாபேதங்களை அநுஸரித்து வைஷம்யங்கள் காட்டப்படுமா என்று. இதற்கு ஜீயர் ஸ்வாமி ஸாதித்த பதில் இருக்கட்டும். இந்தக் கேள்வி கேட்டவர்களுடைய கருத்து என்ன? என்று விமர்சிக்கவேண்டும். ஸ்தலமோ ஸ்ரீபெரும்பூதூர்! அங்கு இவர்களுக்கு எத்தகைய ப்ரவேசம் என்பது நாடு நகரமும் நன்கறிந்ததே. தென்கலையாரோடு கூட ஸமமாக நிற்க முடியுமா? அதில் ஏதேனும் விரோதம் ஏற்படுமா? என்று அறிவுள்ள ஒருவன் கேட்க ப்ரஸக்தியில்லை. துட்டு, காசு கிடைப்பதில் வைஷம்யம் ஏற்படுமா? என்று கேட்பதுதானே இவர்களுடைய கருத்து! நம் ஜீயர் ஸ்வாமியோடு பத்துவருஷங்களுக்கு மேலாகப் பழகிவருமிவர்கள் இந்தக் கேள்விகேட்க அணுவளவேனும் அவகாசம் உண்டோ? கீதாசாரியன்—''ஸமோஹம் ஸர்வபூதேஷு'' என்கிறான். அதை நாம் உள்ளபடி பார்க்க முடியவில்லை. ஜீயர்ஸ்வாமி பக்கலிலுள்ள ஸர்வபூத ஸாம்ய புத்தியை ஈ, எறும்பு எண்ணுயிரம் ஜாதியும் அறியுமே!

''தக்ஷிணையில் வாசியில்லாமல் கிடைக்குமா'' என்று படித்தவன் கேட்பனு? ''ஸம்பாவனு யஸ்ய ஹி காலகூட:'' என்ற தேசிகன் நிலைமையை அணுவளவாவது அபிநயிக்கவேண்டாவா? இதற்குமேல் இவர் என்ன சொல்லக்கூடுமென்றால் ''கேட்டது ஸம்பாவனையைப்பற்றியன்று'' என்று. பின்னர் எதைப்பற்றி என்று மடிபிடித்துக் கேட்கிறேன். இவர்க்கு ஜீயர் ஸ்வாமி அப்படி யேதும் வைஷம்யம் நேராதவாறு தாம் பார்த்துக்கொள்வதாக வாக்குறுதி யளித்து ஸ்ரீமுகம் ஸாதித்தாராம். அந்த வாக்குறுதியின்படி என்ன நடந்தது? பாஹ்யபூமியிலே இவரை உட்காரவைத்து 'இந்த இடத்தைவிட்டு பதசலனம் பண்ணுதீர்' என்று கட்டளையிட்டிருந்ததுதான் உலகமறிந்த ஸாம்யம்.

முக்கியமான விஷயங்கள் விஜ்ஞாபிக்கிறேன். இந்த ஆகாசதாண்டவத்திற்கு இப்போது என்ன ப்ரஸக்தி? இவர் அழைப்பில்லாமலே ஸ்ரீபெரும்பூதூருக்கு வந்திட்டார் என்று யாரேனும் எழுதியிருப்பதுண்டா? அழைக்கப்பட்டே வந்திருக்கிறுர் என்பதை ஐந்து மாதங்களுக்கு முன்னமே வெளியிட்டிருக்கிறேன். ஸ்ரீரங்கநாதன் ஆண்டாளைத் திருமணம் புணர்ந்துகொள்வதாகத் திருவுள்ளம்பற்றி ஸ்ரீரங்க தேவஸ்தானத்திலிருந்து பரிஜன பரிச்சதங்களுடன் தந்தப்பல்லக்கை ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அனுப்பியருளியதுபோல ஸ்ரீமன் நாராயண ஜீயர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தானத்திலிருந்து எடுபிடி சாமான்களுடன் தங்கப் பல்லக்கை இவருக்காக ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பினதாக எழுதிக்கொண்டாலும் கேள்வியில்லை. அதையெல்லாம்விட்டு சுஷ்கதூஷணம் செய்வதற்காகவும், தன் குருவுக்கு இல்லாத பெருமைகளை ஏறிட்டு ப்ரசுரம் செய்வதற்காக அல்லவோ இந்த ஆகாசதாண்டவம் வெளியிடப்பட்டது. வேறுகாரணமுண்டாகில் விரைந்து வெளியிடுக! மதுராந்தக மித்ரமஸ்தகபூஷாவினுல் அவர்க்கு பங்கம் ஏற்பட்டது வாஸ்தவம், அதைப் பரிஹரித்துக்கொள்ளவேணுமானுல் அந்த மஸ்தகபூஷாவில் கண்ட

விஷயங்களை அநுவதித்து விடையிறுப்பது வித்வத்கர்த்தவ்யம். அதற்குச் சரக்கில்லை என்று ஆயிரம்தடவை எழுதியாயிற்று. இன்னமும் எத்தனை தடவை எழுத நேருமோ அறியேன்!

ஸ்ரீபெரும்பூதூரில் கடைசிநாள் மாலை ஸம்பாவனை ஸமர்ப்பிக்கும் ஸந்தர்ப்பத்தில் ஒரு ஸ்தூலகாயன் அங்கே நின்றுகொண்டிருந்தான். "எல்லாரும் வீற்றிருக்க நீ எதற்காக நிற்கிருய்?' என்று நான் கேட்டேன். அதற்கு 'நான் சிபாச்சியத்தில் பரீக்ஷை கொச்சேன். சம்பாவணைக்கு நிக்கரேன்" என்றது அந்தஸ்தூலம். அப்படியானுல் ஒருமூலையில் உட்கார்ந்திரு, பேரைச்சொல்லிக் கூப்பிட்டுக் கொடுப்பர்கள்" என்றேன். அதேஸமயத்தில்தான் மதுராந்தகருடையதர்மதர்மிஜ்ஞான தாரித்ர்யம் ஸ்ரீஜீயர்ஸ்வாமி ஸன்னிதியில் என்னுல் நிரூபிக்கப்பட்டுவந்தது. அதற்கு, ஸ்ரீமதுராந்தகம் காலேஜ் ந்யாய ப்ரொபஸர் ஸ்ரீமான் உ. வே. தையார்வங்கீபுரம் ரங்கராஜாசாரியர் ஸாக்ஷி என்பதை ஏற்கனவே தெரிவித்திருக்கிறேன். இந்தஆகாச தாண்டவமெழுதியவர், மதுராந்தகரே ஆனுலும் வேரெருருவரேயானுலும் சரி. இவர்கள் செய்யவேண்டிய கார்யம் என்னவென்ருல் அந்த தாரித்ரியம் எனக்கில்லை என்ரே எங்கள் தலைவர்க்கு இல்லை என்ரே வித்வான்கள் உகக்க பாமரர்களும் தெரிந்துகொள்ள விஷய நிரூபணத்தில் இறங்கவேண்டும். அதற்கு ஈஷத்தும் சரக்கில்லையே! மேலே ப்ரஸ்தாவித்த ஸ்தூலகாயமே இந்த ஆகாசதாண்டவப்ரகாசகம்" என்பதில் ஸந்தேஹகந்தமுமில்லை. இது மதுராந்தகருக்கு அபகீர்த்தியையேதான் விளைக்கும் என்பதில் ஐயமில்லை.

ஸம்பாவனை ஸந்தர்ப்பத்தில் ஒருவார்த்தை வித்வான்கள்முன்னிலையில் நான் சொன்னதுண்டு. (அதாவது) அவ்வூர்க்கலாசாலையில் சாஸ்த்ரங்கள் வாசித்து ந்யாயவேதாந்த வித்வானும் உபயவேதாந்த ப்ரவர்த்தகராயும் அக்காலம் அந்த மஹாகோஷ்டியை அலங்கரித்தவருமான ஸ்ரீமதுபயவே அஷ்டகோத்ரம் சித்ரகூடம் வேங்கடாசார்ய ஸ்வாமியையும் ஸாஹித்ய வ்யாகரண வேதாந்த ப்ரவீணராய் நெடுநாள் (ஸ்ரீபெரும்பூதூர்) காலேஜில் ப்ரின்ஸிபாலாய் விளங்கின (அப்போதும் அங்கு எழுந்தருளி யிருந்த) பரமஸத்வநிதியுமான ஸ்ரீமதுபயவே. காந்தூர் சேஷாத்திரி ஆசார்ய ஸ்வாமியையும் ப்ரஸ்தாவித்து அவர்களுக்கு உபயவேதாந்த பீட ப்ரசஸ்தி பிருதம் அளிக்காமல் தர்மதர்மி ஜ்ஞான தரித்ரருக்கு அளித்தது அவ்வளவு உசிதமன்று என்று சொன்னேன். இதை அங்குள்ளார் பலரும் கரகோஷத்தினுல் ஆமோதித்தார்கள். இது நான்சொன்னது அஸூயையினுலன்று. விசேஷித்தது எனக்கு ஒருபெருமையை விரும்பியும் அன்று. நான் அரசாங்கத்தினர் மூலமாக பலவிருதாவளிகள் பெற்றிருக்கிறேன். ஆகவே அது ஸ்வார்த்தமாகச் சொன்னதன்று. ஔசித்யத்தை உணர்த்தியவாறு. சிலவருஷங்களுக்குமுன்பு இந்த மதுராந்தகர்க்கு 'ஐயோபாவம் ஐயங்கார் என்று விருதுசாத்தி என்னுடைய நூல்களில் சிலவிஷயங்கள் எழுதியிருந்தேன். ஒருகால் இவர் காஞ்சீபுரம் மடாதிபதிஸ்வாமியிடம் வந்திருந்தபோது 'அண்ணங்கராசார்யருடைய நூல்களில் ஐயோ பாவம் ஐயங்கார் என்று அடிக்கடி காண்கிறதே, அது யாரைப்பற்றியது என்று (ஸ்வாமி) கேட்க 'அது எனக்குத்தெரியாது' என்று சொல்லிவிடாமல் 'அது என்னைப்பற்றித்தான்' என்று ஆனந்தமாகச் சொல்லிக் கொண்டாராம். இப்படிப்பட்ட கீர்த்தித்வஜஸ்தம்பஸமாசார விசேஷங்கள் மூலையில் அடங்கியிருந்தவை முற்றத்தில் வெளிவருவதற்கு முயலுகிருர்பாவம். யார்? ஐயோபாவம் ஐயங்கார்.

போதும் போதும் இவ்வவலக்ஷண ப்ரஸங்கங்கள்!

# ஸ்ரீமுகங்கள்.

## 1

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி அநுக்ரஹித்தருளின ஸ்ரீமுகம். (ப்ரமாதீச ஸ்ரீ மார்கழி மீ மாலே மணிவண்ணா)

.........தேவரீர் அனுப்பிவரும் ஸஞ்சிகைகளை அவ்வப்போது பெற்று ஓரக்ஷரமும் விடாமல் வாசித்துவருகிறேன். சில சமயங்களில் சின்னவரை வாசிக்கச் சொல்லிக் கேட்பதுமுண்டு. பல வருஷங்களுக்கு முன்பு திருப்பதியில் எழுந்தருளியிருந்த வித்வத் ஸிம்ஹமான ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி குத்ருஷ்டி த்வாந்த மார்த்தண்ட மென்றொரு க்ரந்த மருளிச்செய்தது நினைவுக்கு வருகிறது. க்ரந்தத்திற்கு இட்ட அந்தப் பெயரை அடியேன் தேவரீருக்கு இடுகிறேன். தேவரீருக்குக் கிடைத்துள்ள பிருதுகளோடு கூட இந்த பிருதையும் (அதாவது) குத்ருஷ்டி த்வாந்த மார்த்தண்ட மென்கிற பிருதையும் கூட்டிக்கொள்ளும்படி ப்ரார்த்திக்கிறேன். தேவரீர் நிரூபித்தருளும் விஷயங்களை அடிக்கடி யெடுத்து வாசிக்கும்போதும் அப்போதப்போது நவம் நவமாகவே தோன்றி வருகிறது. ...............இவ்விடம் திருவேங்கடமுடையானை ஸேவிக்கும் வ்யாஜமாக ஒருவிசை எழுந்தருளி அடியேனுக்கும் ஸேவை ஸாதிக்கும்படி ப்ரார்த்திக்கிறேன்.

இதி.........திருமலை பெரிய ஜீயர் ஸ்வாமி.

## 2

கோயப்புத்தூர் ஸ்ரீமதுபயவே. வித்வான் வேதவ்யாஸ பட்டர் திருமலை ஐயங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

.........அவ்விடம் வரப் பலகால் பயணப்பட்டும் ஏதோ தௌர்பாக்யத்தால் தடைப்பட்டே வருகிறது. எப்படியும் விரைவில் விடைகொள்வேன். ஐந்தாறு மாதங்களாய்க் கிடைத்துவரும் ஸ்ரீராமாநுஜன் அரிய பெரிய விஷயங்களைக் கொண்டுள்ளது. 'அபூர்வார்த்த ரத்ன நிதி' என்கிற மகுடத்தின் கீழும் 'எனது இரவு நினைவுகள்' என்கிற மகுடத்தின் கீழும் வெறும் விஷயங்களை எத்தனை தடவை வாசித்தாலும் தெவிட்டாத அமுதமா யிருக்கின்றன. பதிரிகாச்ரம மார்க்க சிந்தனை முதலானவற்றை வாசிக்கும்போது ஏதோ பத்ரிகை வாசிக்கிறோம், புத்தகம் வாசிக்கிறோம் என்பதாகத் தோன்றுவதில்லை; பதரிகாச்ரம யாத்திரை செய்துகொண்டு போவதாகவே தோன்றுகிறது. தேவரீரோடுகூட அடியேனும் பல தடவை பலவிடக்களில் யாத்திரை செய்தவனாகையால் தேவரீருக்குத் தோன்றும் சிந்தனைகள் அடியேனுக்கும் தோன்றி வருகின்றன. இப்படிப்பட்ட விஷயங்கள் எத்தனை காலம் வெளிவந்துகொண்டிருந்தாலும் இதிஹாஸ புராணங்களை வாசித்து ரஸிப்பது போலவே ஒவ்வொருவரும் ரஸிப்பர் என்பதில் ஸந்தேஹமில்லை. இதுவொரு விலக்ஷணமான அனுபவம் என்றே கருதுகின்றேன். இந்த சிந்தனைகளும் அபூர்வார்த்த ரத்னநிதியும் இடையறாமல் வந்துகொண்டே யிருக்கவேணும். மஹர்ஷிகள் தவம்புரிந்தால் அதற்கு தேவலோகத்து மாதர்கள் சிலர் வந்து பங்கம் விளைப்பது போல மேலே குறித்த விஷயங்கள் தொடர்ச்சியாக வெளிவருவதற்கு இடையூறு செய்யக் கருதியே சிலர் அநாமதேய நிந்தைக் கந்தைகளை வெளியிட்டு வருவதாகத் தெரிகிறது. அவற்றில் தேவரீர் கண் செலுத்தாமல் ஸங்கல்பித்த ரீதியிலேயே பத்ரிகையை நடத்திவருவது உலகுக்குப் பேருதவியாகும். இரண்டொரு வருஷங்களுக்கு முன்னே கண்ணனும் அண்ணாவும் பேசியவை என்றொருகட்டுரை பேரின்ப வெள்ளமென்றே சொல்லலாம்படி வெளிவந்து கொண்டிருந்தது. அது தொடர்ச்சியாக வெளிவந்து கொண்டிருக்குமென்று பலர் எதிர்பார்த்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. அதையும் தொடர்ந்து அனுபவிக்கச் செய்யவேணுமென்று ப்ரார்த்திக்கிறேன். மதுபானம் பண்ணும்போது மக்ஷிகைகள் வந்து புகுந்தால் அவற்றை நிரஸிக்க வேண்டுவதும் அவசியமாகத்தான் ஆகிறது. ஆண்டாள் "பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தான்" என்கிறாள். கூரத்தாழ்வான் "கம்ஸ முக்க்ய ந்ருப கீட நிபர்ஹணம்" என்கிறார். அந்த ரீதியில் அவலீலையாகக் களைந்தொழிக்க வேண்டிய விஷயங்களில் க்ரந்த விஸ்தரம் செய்தருளாமல் உலகமெல்லாம் குதூஹலத்துடன் எதிர்பார்க்கும் விஷயங்களையே தொடர்ந்து எழுதிவரும்படி ப்ரார்த்தித்து நிற்கிறேன்.

இங்ஙனம் திருமலைபட்டர் 1—1—74.

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

SRI T. A. ANANTHALWAN,
Manager, GRANTHAMALA OFFICE, Kancheepuram-3.
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,
KANCHEEPURAM. Pin Code 631503

To
Sriman / Srimathi




132 Sri M. Kannapiran Mudaliar,
31, Mosque Street,
Saidapet, Madras-15.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-3,